‘அவள் படிப்பிலும் விளையாட்டுக்களிலும்
# ஒரே போல் கெட்டிக்காரி!’



ஆனல், சில நாட்களுக்கு முன் அவளுக்கு ஒரே மந்தம். நான் டாக்டரை விசாரித்தேன்.

டாக்டர் சொன்னர்: “அவ-ளுக்கு தினமும் ஹார்லிக்ஸ் கொடுங்கள்.”

ஹார்லிக்ஸ் சாப்பிட்ட பின் அவள் படிப்பிலும் விளையாட்-டுக்களிலும். ஒரேபோல் கெட்டிக்காரியாக மாறிவிட்டாள்!



**ஹார்லிக்ஸ் அவளைக் கெட்டிக்காரியாக மாற்றிற்று!**

வளரும் குழந்தைகளுக்கு தெம்புடன் திகழத் தேவையான அதிக சக்தியை அளிக்க ஹார்லிக்ஸ் உதவுகிறது. டாக்டர்கள் குழந்தைகளுக்கு ஹார்லிக்ஸ் சிபார்சு செய்கிறர்கள். உங்கள் மகளுக்கும் ஹார்லிக்ஸ் தேவை!




ஆடைச் சத்து நிறைந்த பாலுடன் கோதுமை மாவு மற்றும் மால்டெட் பார்லியின் போஷாக்குச் சத்துக்கள் சேர்ந்தது

# ஹார்லிக்ஸ்
அதிக சக்தியை அளிக்கிறது!

ADVERTS, PP-8




# KEEP YOUR EYES OPEN

## AN APPEAL TO SHINGAR KUMKUM CONSUMERS

''சிங்கார் கும் கும்''க்கு நீங்கள் அளித்து வரும் அமோகமான அன்பின் ஆதரவு காரணமாக, சந்தர்ப்பவாதிகள் சமயத்தைப் பயன்படுத்திக் கொண்டு மேலே கண்டுள்ள எமது புகழ்பெற்ற தயாரிப்பைப்போலவே, பாட்டிலின் அமைப்பு, கலர் வகைகள், லேபிள் போன்று எல்லாவிதத்திலும் காப்பி அடித்து — உண்மையான தயாரிப்பென நம்பும்படி எமது மதிப்புமிகுந்த வாடிக்கையாளர்களை ஏமாற்ற முயற்சி செய்கின்றனர் என்பதை இதன்மூலம் அறிவிக்கின்றோம். ஆகையால், இம்மாதிரிப் போலித் தயாரிப்புக்களைக் கொடுத்து ஏமாற்ற முயலும் தயாரிப்பாளர்களையும், டீலர்களையும் புறக்கணிக்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்வதோடு, நீங்கள் கடையில் வாங்கும்போது உண்மையான ''சிங்கார் கும் கும்'' பாட்டில்தானா என்பதையும் கவனமாகப் பார்த்து வாங்கும்படி கேட்டுக் கொள்ளுகிறோம்.




**KUMKUM**

THE QUALITY KUMKUM FOR BRIGHTER BINDI

ALWAYS IMITATED BUT NEVER EQUALLED

PARAMOUNT PRODUCTS, BOMBAY-31.

# முற்றிலும் நம்பக்கூடியது பாடா ஸாண்டக்.

**சாந்தா**
ப்ளூ, பீஜ்
மற்றும்
பிங்க்
அளவு 2 - 6
ரூ. 6.95



**லீலா**
க்ரே, பீஜ்
மற்றும்
பிங்க்
அளவு 2 - 6
ரூ. 6.95

செயிலானின் காலணிகள் அழகாகவும் மென்மையாகவும் இருப்பதோடு பாதங்களை நாள் முழுதும் புத்தம் புதியதாக வைத்திருக்கின்றன. நீண்ட காலம் புதுக்கருக்கு அழியாமல் உழைக்கக் கூடியவை. கவனிப்பது சுலபம்; சற்றே துடைத்து விட்டு அணிந்துகொள்ள வேண்டியது தான்!

**Bata**
**சாண்டக்***
**கெமிலாண்***

* பதிவு பெற்ற வியாபார சின்னம்
பாடாவின் குறிப்பின்படி தேர்ந்தெடுக்கப்பட்ட
தயாரிப்பாளர்களால் தயாரிக்கப்படுவது

# கல்கி பொருளடக்கம்

சாதாரண, ஆனி, 28 : 1970, ஜூலை 12





அட்டைப்படம் : வித்யாசங்கர்.



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங் களும் கற்பனையே.


| சந்தா விவரம் | ஒருவருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |














**சோஷலிஸம் வேலை செய்கிறது!**









தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

மலர் 29 ● இதழ் 50



# பழைய காங்கிரஸுக்கு என் பாராட்டு

அரசியலை ஆன்மிகப்படுத்துவதே தமது நோக்கமென்று காந்திஜி அடிக்கடி கூறுவது வழக்கம். அரசியல் தலைவர்களின் சொல், செயல், கொள்கை ஆகிய அனைத்துமே சத்தியத்தில் வேரூன்றியனவாக இருக்க வேண்டும் என்பது இதன் முதல் கோட்பாடு. சமீபத்தில் தேர்தலில் வெற்றிபெற்றவுடன் புது பிரிட்டிஷ் பிரதமர் ஹீத், அரசியல் தலைவர்கள் மக்களிடம் உண்மையையே பேச வேண்டும் என்று கூறினார். ஸ்ரீ ஹீத் ஒரு காந்தியவாதி அல்ல. ஆனால் மாசு படிந்துள்ள இன்றைய அரசியல் உலகில் காந்தியப் பணிக்கு அவர் ஏற்றம் கொடுத்திருக்கிறார். சத்தியத்தை ஹீத் வற்புறுத்தியிருப்பது, போதிய பக்குவம் அடையாத இந்தியா போன்ற ஜனநாயகங்களுக்கு நல்ல படிப்பினையாகும்.

பழைய காங்கிரஸின் மகாநாடு குறித்த சமாசாரங்கள் பத்திரிகைகளில் நிறைய வெளியாகியுள்ளன. ஸ்ரீமதி இந்திராகாந்தியையும், கம்யூனிஸ்ட்களையும் எதிர்த்துக் கூட்டணி சேருவது பற்றி ஏற்பட்டுள்ள உடன்பாட்டின் சாரமான அம்சங்களை ஸ்ரீ மஸானி வெளியிட்டுள்ளார். 'தேசப் பற்றுள்ள ஜனநாயகவாதிகள் யாவரும் கீழ்க் கண்ட அம்சங்களின் அடிப்படையில் ஒன்று சேர வேண்டும்: (1) தேசத்தின் ஐக்கியம், தேசப் பாதுகாப்பு; (2) மக்கள் சாஸனப்படி பெற்றுள்ள சுதந்திரங்களைக் காப்பது, ஜனநாயக ஸ்தாபனங்களை நிலைப்படுத்துவது; (3) சட்டத்தையும் சமூக ஒழுக்கத்தையும் வளர்ப்பது; (4) சமூக ரீதியிலும் பொருளாதார ரீதியிலும் அனைவரும் சமவாய்ப்புப் பெற்று, சமய பேதமின்றி ஒரு சமூகமாக அமைவது; அனைவரும் ஜீவனோபாயம் பெற வசதி உண்டாக்கி, அனைவருக்கும் குறைந்தபட்ச வாழ்க்கைத் தேவைகளைப் பூர்த்தி செய்வது'— இவ்வாறு ஸ்ரீ மஸானி கூறியுள்ளார்.

எதிர்ப்புக் கூட்டணியின் அவசியத்தைப் பழைய காங்கிரஸ் மகாநாடு உணர்த்தியுள்ள போதிலும், இன்னமும் அக்கட்சியில் பலர் ஸ்ரீமதி இந்திரா காந்தி கோஷ்டியுடன் காரிய சாத்திய மற்ற அரசியல் கோஷத்தில் போட்டி போடுவதை விடலாமா என ஐயுற்றே வருகின்றனர்.

'கன்ஸர்வேடிவ்' என்ற சொல்லுக்கு பிரிட்டிஷ் பிரதமர்கள் நன்மதிப்பைத் தேடிக்கொடுத்திருக்கின்றனர். இந்தியாவில் 'மிதவாதி' என்ற சொல்லுடன் அதையும் சேர்த்துப் பழிக்கிறார்கள். சுதந்திரக் கட்சி கன்ஸர்வேடிவ் என்று சில சமயம் வர்ணிக்கப்படுகிறது. அக் கட்சி சீர்திருத்தத்தையோ மாறுதலையோ எதிர்க்கவில்லை. நமது மரபில் பொதிந்து கிடக்கும் நல்ல அம்சங்களைப் போஷித்து மேலும் நல்ல அம்சங்களைக் கூட்டுவதே தன் பணி என்று சுதந்திரக் கட்சி வாக்களித்துள்ளது. சீர்திருத்தப் பாதையில் முன்னேறும் போது ஏற்கனவே இருந்து வரும் நல்ல அம்சங்களை இழந்துவிடலாகாது. நல் வாழ்வுக்கு அடிப்படையானவை என்று கருதப்படுபவைகளைத் தியாகம் செய்தால் எந்தச் சீர்திருத்தத்தினாலும் நன்மை ஏற்படாது. உதாரணமாகத் தேசத்தைத் தொழில்மயமாக்கலாம்; ஆனால் நாட்டுப்புற மக்களின் க்ஷேமத்தையும் விளைச்சலின் அபிவிருத்தியையும் மறந்துவிடக் கூடாது. பொருளாதார அபிவிருத்திக்காக ஒழுக்கத்தையும் நன்னடத்தையையும் இழந்துவிடக்கூடாது. செல்வத்தைப் பெருக்கலாம்; ஆனால் கடவுளை விலக்கிப் பணத்தையே பூசிப்பவர்களாகிவிடக் கூடாது. அரசியல் சாஸனத்தில் உத்தரவாதம் செய்யப்பட்டுள்ள சுதந்திரங்களைப் பிரஜைகளுக்கு இல்லாதபடி செய்து அரசாங்கத்துக்கு மிதமிஞ்சிய பலத்தை அளித்துவிடக் கூடாது. அரசாங்க சர்வாதிகாரத்தின் கீழ் மக்களை வைத்துவிட்டால் உற்பத்தி பெருகும் என்று நினைப்பது மதியீனம்.

மந்திரி சபை மாறுதல்களைப் பற்றி 'ஹிந்து' எழுதியிருக்கிறது. ஸ்ரீ சவான் உள்துறை மந்திரியாக இருந்தபோது

நாட்டின் பல பகுதிகளில் சட்டம் - அமைதி நிலைமை மோசமாகி வகுப்புவாத சக்திகளும், தேசவிரோத சக்திகளும் வலுவடைந்திருப்பதை அது சுட்டிக்காட்டுகிறது. இலாகாக்களை மாற்றியதால் மட்டும் நன்மை விளையாது என்றும், எல்லா மக்களும் கடுமையாக உழைத்து அதிக உற்பத்தியைச் சாத்தியமாக்குவதற்கு வேண்டிய உற்சாகத்தைத் தரக் கூடிய தலைமையும் கொள்கைகளுமே தேவை என்றும் அது கூறுகிறது. தேசத்தை ஒன்றுபடுத்தி உற்பத்தியை ஊக்கப்படுத்துவதைவிட அரசியல் கண்ணுமூச்சியில் பிரதமரும் அவரது சகாக்களும் மூழ்கியிருப்பதாக அது கூறுகிறது.

கசப்பான உண்மையை ஸ்ரீ எஸ். கே. பாட்டீல் தமக்கே உரிய பாணியில் எடுத்துக் காட்டியிருக்கிறார். அவர் கூறியிருப்பதாவது:

''வகுப்புக் கலவரங்கள் துரதிர்ஷ்டமானவை. ஆனால் நக்ஸல்பாரி வன்முறைதான் இன்று தேசத்தை எதிர்நோக்கியுள்ள பேரபாயம். அது ஜனநாயகத்தை மட்டுமின்றித் தேச சுதந்திரத்தையும் பாதிக்கவல்லது. எனினும், ''இடதுசாரி கெடுபிடிப் போக்கு'' என்றும், ''சமூக—பொருளாதாரப் பிரச்னை'' என்றும் அதை வர்ணிப்பதுடன் பிரதமர் திருப்தியடைகிறார். நக்ஸல்பாரி அபாயத்திலிருந்து மக்களின் கவனத்தை வேறு திசையில் திருப்பிவிட்டு வகுப்புவாதத்தை அவர் முழுமூச்சுடன் தாக்குகிறார்.''

1940ம் ஆண்டில் பிரிட்டிஷ் மக்கள், கட்சிகளை மறந்து புரிந்ததைப் போன்ற வீர தீரச் செயல்களும் நெஞ்சுறுதியும் அடுத்த பத்து ஆண்டுகளில் இந்தியாவுக்குத் தேவை.

சிறந்த அம்சங்களைப் பாதுகாக்கின்ற தன்மையுள்ள கன்ஸர்வேடிவ் கட்சி என்று சுதந்திரக் கட்சியைக் கூறலாம். புதிய காங்கிரஸ்-ம் அதன் கூட்டாளிகளும் பொய் சொல்வதை ஒரு கலையாக வளர்த்திருக்கிறார்கள். முன்னுக்குப்பின் முரண் என்று சொல்வார்களே என்பதற்காகப் பயப்படாமல் பழைய காங்கிரஸார் உண்மையையே பேச வேண்டும். பிரத்தியட்ச உணர்வுடன் கடுமையாக உழைத்துத் தேசத்தின் க்ஷேமத்தை உறுதி செய்ய வேண்டும். அதுதான் அதற்குள்ள தலையாய பணி. வர வர ராஜீய வாழ்வு சறுக்கு மர விளையாட்டாகி விட்டது. தேசிய நலனிலிருந்து இறங்கி வந்து கட்சி நலனுக்கு முக்கியத்துவம் கொடுத்தார்கள். பிறகு கட்சி நலன் சுயநலமாகத் தாழ்ந்து விட்டது. இந்தப் போக்கை மாற்ற வேண்டும். சத்தியம், தேசிய க்ஷேமம் ஆகியவற்றை உறுதி செய்கின்ற வகையில் சிரமப்பட்டுச் சறுக்கு மரத்தில் நாம் மேலேறியாக வேண்டும். பழைய காங்கிரஸின் மாநாடு சரியான போக்கை மேற்கொண்டிருப்பதில் மகிழ்ச்சி கொள்கிறேன்.

**('ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி எழுதியது.)**

# என்ன சேதி?

## பாராட்டுகிறோம்

ஈசன் என்ஜினீரிங் கம்பெனியின் தலைவரான ஸ்ரீ ஈசுவரன் அவர்கள் இரண்டாம் முறையாகச் சென்னை ஹிந்துஸ்தான் வர்த்தகர் சங்கத்துக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருப்பதை அறிந்து மகிழ்கிறோம்.

ஸ்ரீ ஈசுவரன் தமிழகத்தில் தொழில் வளம் பெருகுவதில் மிக்க அக்கறை காட்டுபவர்.

ஸ்ரீ கே. ஈசுவரன்



'கிராமப் புறங்களில் தொழிற்சாலைகள் ஏற்படுத்தவேண்டும். எல்லாத் தொழிற்சாலைகளும்சென்னை போன்ற பெரு நகரங்களிலேயே தொடங்க வேண்டும் என்பவர்களுக்கு லைசென்சுகள் வழங்காமலிருப்பது பற்றிக்கூட யோசனை செய்யலாம்' என்கிறார். இப்படிச் செய்வதால் நகரங்களில் சேரிகள் பெருகுவது தடைப்படும். கிராமங்களின் சுபிட்சமும் பெருகும்.

இன்றைய தமிழக அரசு, திரு ஈசுவரன் அவர்களின் யோசனைகளைக் கேட்டுப் பயன் பெறும் என்று நம்புவோமாக!

## தொழில் நிபுணரின் பயணம்

உலோகங்களின் தரம், குணம், பொருள் உற்பத்திக்கு அவை உபயோகப்படுத்தப் பெறும் விதம் — இவற்றில் விஷய ஞானம் பெற்ற நிபுணர்களில் இந்தியா பிஸ்டன்ஸ் உலோகத் துறை பிரிவு மானேஜர் திரு வி. டி. பாலசுப்பிரமணியம் பிரசித்தமானவர். பிரபல வழக்கறிஞர் திரு வி. தியாகராஜனின் குமாரர் இவர். இந்தியா பிஸ்டன்ஸ் தொடக்கத்திலிருந்து உலோகத் துறைப் பிரிவில் பெரும் பணியாற்றி வரும் இவர், அந்தத் தொழிற்சாலையின் பொருள்கள் ஏற்றுமதி பற்றி முடிவு காணவும் உலோக ஆராய்ச்சியில் சமீபகால முன்னேற்றங்கள் பற்றி அறியவும் சமீபத்தில் ஆஸ்திரேலியாவுக்கு விஜயம் செய்கிறார். அவருக்கு வாழ்த்துக் கூறி அனுப்புகிறோம்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

தமிழ் நாட்டின் நில உச்சவரம்பு குறைப்புச் சட்டத்துக்கு ஜூன் 20-ந் தேதியன்று ராஷ்டிரபதி அங்கீகாரம் அளித்து விட்டார். இந்தச் சட்டமும், இதற்கு முற்பட்ட 1961ம் வருஷத்திய நிலவரம்புச் சட்டமும் சட்டப்படி செல்லுமா என்று பாதிக்கப்பட்டவர்கள் கால தாமதம் செய்யாமல் ஹைகோர்ட்டிலும், ஸுப்ரீம் கோர்ட்டிலும் வழக்குத் தொடுக்க வேண்டும்.

சட்டப்படி செல்லுமா என்பது ஒருபுறமிருக்க, காலக்கிரமத்தில் குடும்பங்கள் விருத்தியடைந்து பல பிள்ளைகளும், பெண்களும் நில உடைமைகளைப் பகிர்ந்து கொள்வதால், அவற்றின் அளவைச் சட்டம் போட்டுக் குறைப்பதற்கு எவ்வித நியாயமும் இல்லை.

★

சென்னை நகர கல்லூரிகளைச் சேர்ந்த மாணவர்கள் பல்கலைக் கழகத் துணை வேந்தரைக் கண்டு அவரிடம் ஒரு விண்ணப்பம் கொடுத்தனர். எது பயிற்சிமொழியாக இருக்க வேண்டும் என்பதை மாணவர்களின் இஷ்டத்துக்கு விட்டுவிட வேண்டும் என்று அந்த விண்ணப்பம் கோரியது. இன்றைய நிலைமை எவ்வளவு விரும்பத் தகாததாக இருந்து வருகிறது என்பதைத் துணைவேந்தர் அளித்த பதில் புலப்படுத்தியது. இது கொள்கையைப் பற்றிய விஷயம்; மாநில சர்க்காரின் அதிகாரத்துக்கு முற்றிலும் உட்பட்டது; இவ்விஷயமாகத் தாம் செய்யக்கூடியது எதுவுமில்லை என்று துணை வேந்தர் பதில் அளித்ததாக ''இந்தியன் எக்ஸ்பிரஸ்'' கூறுகிறது. மாநில சர்க்காரின் கொள்கை காரணமாகப் பல்கலைக் கழகத்தின் சுதந்திரம் பறிபோய் விட்டது. துணைவேந்தரின் அதிகாரங்களும், மாணவர்களின் நலனும் மறைந்து விட்டன.

★

சுதந்திர தினத்தன்று நிலப்பறி செய்யப் போவதாக கம்யூனிஸ்ட் தலைவர்கள் பகிரங்கமாகப் பிரகடனம் செய்துள்ளனர். இவர்களைத் தடுப்புக் காவல் சட்டத்தின் கீழ் கைது செய்வதற்காகத் தமிழ் நாடு சர்க்கார் அவசரச்சட்டம் பிறப்பிக்காமலிருப்பது நியாயமல்ல. ஆளும் பொறுப்பை ஏற்றவர்கள், சட்டத்தைப் பகிரங்கமாக மீறும் இது போன்ற நடவடிக்கைகளை முறியடிப்பதற்காகக் கடுமையாகவும் உடனடியாகவும் நடவடிக்கை எடுக்காவிடில் கோழைத்தனம் காட்டுவதாகக் குறை கூறப்படுவது இயற்கையே. தடுப்புக் காவல் அவசரச் சட்டம் பிறப்பித்துள்ள ராஜஸ்தான் சர்க்கார் இவ்விஷயத்தில் பாராட்டுக்குரிய தைரியத்தைக் காட்டியுள்ளது.

நிலப்பறி உத்தேசம் நக்ஸல்பாரியினரின் சட்டவிரோதச் செயலுக்குச் சற்றும் குறைவான தீமை அல்ல.

★

தமிழ்நாடு சுதந்திரக் கட்சித் தலைவர் ஸ்ரீ கே. சுந்தரம் பின்வருமாறு எனக்கு எழுதியுள்ளார்: ''சமீப காலமாகக் கோவை மாவட்டத்தைச் சேர்ந்த கட்சி அங்கத்தினர் பலர் கோஷ்டியாக ராஜிநாமாக் கொடுத்து வருகிறார்கள். நமது காரியதரிசி ஸ்ரீ ஆர். கிருஷ்ணசுவாமி கௌண்டர் அவர்கள் ராஜிநாமா செய்ததன் விளைவே இது. விவசாயிகளின் (விலைக் கட்டண எதிர்ப்புக் கிளர்ச்சி) கோரிக்கையை நம் கட்சி ஆதரிக்காததாக விரிவாகப் பிரசாரம் செய்யப்படுகிறது.''

ஸ்ரீ கிருஷ்ணசுவாமிக் கௌண்டரின் செயல்கள் தமிழ்நாட்டில் நம்கட்சிக்குப்பெரிய தீங்கு விளைவித்து வருவது குறித்து வருந்துகிறேன். விவசாயிகளின் குறைகள் நியாயமானவையே. ஆயினும் நேரடி நடவடிக்கை ஒழுங்கீனத்தில் கொண்டு விட்டுவிடும்.

தி. மு. க. வுடன் நமக்குக் கருத்து வேற்றுமைகள் இருக்குமாயினும், சுதந்திரக் கட்சி அங்கத்தினர் பலர் விரும்புவதுபோல் அவர்களோடு நமது தேர்தல் இணைப்பை முறித்துக் கொள்வது விவேகமாகாது.

---

கல்கி பத்திரிகை அச்சிலும் விதத்திலும் தரத்திலும் விசேஷ முன்னேற்றம் ஏற்படப் போகிறது என்பதை நேயர்களுக்கு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். கல்கி பத்திரிகைக்கென்றே விசேஷமாக ஆஃப்ஸெட் இயந்திரம் ஒன்று கிழக்கு ஜெர்மனியில் உருவாகிச் சென்னைக்கு வந்து கொண்டிருக்கிறது. ஒரே சமயத்தில் பல வர்ணங்களில் கல்கியை அச்சடித்துத் தரப்போகும் இந்த இயந்திரத்தை இயக்கும் விதம் பற்றி நன்கு தெரிந்து கொள்ள கல்கி ஸ்தாபனத்தைச் சேர்ந்த ஸ்ரீ கே. ஆர். ஆத்மநாதன் அவர்கள் கிழக்கு ஜெர்மனிக்கு ஜூலை 1ந் தேதி இரவு சென்னையை விட்டுப் புறப்பட்டுச் சென்றார். சென்னையிலேயே பிரபல அச்சகங்களில் ஆஃப்ஸெட் பிரிண்டிங் இயந்திரங்களில் நன்கு பயிற்சி பெற்றுள்ள ஸ்ரீ ஆத்மநாதன் கல்கிக்கு வரவிருக்கும் விசேஷ இயந்திரத்தின் நுட்பங்களையும் அதனைக் கையாளும் முறைகளையும் தெரிந்து கொண்டு வெற்றிகரமாகப் பயிற்சி பெற்றுத் திரும்பிவர வாழ்த்துகிறோம்.










ஐந்தாவது மாதத்தில் அனு உட்கார ஆரம்பித்தான். ஒன்பது மாதங்களில் அவனது பிறப்பு எடை மும் மடங்காகியது...படு சுட்டியாக வளைய வரும் இக் குழந்தையைத் தாய்மார்கள் வியப்புடன் கண்டு மகிழ்ந்தனர். அவனுடைய வலிமையான ஆரோக்கியத்தின் இரகசியம்: விசேஷமான ஒரு குழந்தை உணவு









அறிமுகப்படுத்திய இரண்டு ஆண்டுகளுக்குள்ளாகவே குழந்தை உணவுகளுக்குள்ளேயே உச்ச விற்பனை எய்தியுள்ள அமுல் ஸ்ப்ரே ஒரு புதிய சாதனை புரிந்துள்ளது. அருமையான உங்கள் குழந்தைக்கு விசேஷமான ஊட்டச் சத்தை அளிப்பதற்காக ஒரு விசேஷமான செய்முறை (ஸ்ப்ரே-டிரையிங்) மூலம் விசேஷ ஆக்கம் பெற்றது அது. சீரணிக்க எளிதான அமுல்ஸ்ப்ரே சரிவிகிதமான ஊட்டச் சத்தை அளிக்கிறது: அவசியமான வைட்டமின்கள், தாதுப் பொருள்கள் உள்பட உடலும் மூளையும் வளர அதிக அளவில் தரமான புரதச்சத்து

# அமுல்ஸ்ப்ரே

**தாய்ப்பாலுக்குப் பதிலாக புகட்டச் சிறந்தது.**

ASP/AS-18

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

ஏழாம் அத்தியாயம்

## வாலில்லாக் குரங்கு

மணிமேகலை சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்தாள். தான் சற்றுமுன் கண்ட தோற்றம் வெறும் பிரமைதானா? அல்லது கனவில் கண்ட தோற்றமா? கனவாக இருந்தால் தான் தூங்கிக் கொண்டல்லவா இருக்க வேண்டும்? தன்னைத் தானே தொட்டுப் பார்த்துக் கொண்டாள். இல்லை; தான் தூங்கவில்லை. பழுவூர் இளையராணிக்காக ஆயத்தமாகி யிருக்கும் அந்தப்புர அறை அல்லவா இது? பளிங்குக் கண்ணாடியில் தன் முகம் இதோ நன்றாகத் தெரிகிறது. அதோ குத்து விளக்கு எரிந்து கொண்டிருக்கிறது. கண்ணாடிக்கு எதிரே சுவரை உற்றுப் பார்த்தாள். அங்கே ஓர் இரகசிய வாசல் இருப்பது அவளுக்குத் தெரியும். அதை வெளியிலிருந்தும் திறக்கலாம்; உள்ளிருந்தும் திறக்கலாம். மணிமேகலை அந்த இடத்தில் வந்து சுவர் ஓரமாக நின்று காதைச் சுவரோடு ஒட்டி வைத்து உற்றுக் கேட்டாள். அவ்விடத்தில் சுவரோடு சுவராக இருந்த இரகசியக் கதவு மரத்தினால் ஆனதுதான். ஆகையால் உள்ளே வேட்டை மண்டபத்தில் ஏதோ ஓசைப்பட்டது போல் கேட்டது.

மணிமேகலை மெதுவாக இரகசியக் கதவைத் திறந்தாள். வேட்டை மண்டபத்தில் எட்டிப் பார்த்தாள். அந்த மண்டபத்தில் பெரும் பகுதியில் இருள் சூழ்ந்திருந்தது. ஒரு மூலையில் சிறிய அகல் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. திடீரென்று அச் சிறிய விளக்கின் ஒளி மங்



கிற்று. அடுத்தகணம் மூன் போல் பிரகாசித்தது. ஏதோ ஓர் உருவம் அவ்விளக்கின் முன்புறமாகக் குறுக்கே சென்றது போலிருந்தது. அக்காரணத்தினால்தான் விளக்கு ஒருகணம் மறைந்து அடுத்த கணம் பிரகாசித்திருக்க வேண்டும். அப்படி விளக்கை ஒருகணம் மறைத்த உருவம் — அதன் முகம் — தான் சற்றுமுன் கண்ணாடியில் கண்ட முகம்தானா? அல்லது இதுவும் தன் சித்தக் கோளாறுதானா?

மணிமேகலை எட்டிப் பார்த்தபடியே கையைத் தட்டினாள். ''யார் அங்கே?'' என்று மெல்லிய குரலில் கேட்டாள். பதிலுக்கு ஒரு கனைப்புக்குரல் கேட்டது. வௌவால் ஒன்று, தான் மேல்கூரையில் தொங்கிய இடத்திலிருந்து கிளம்பி, 'ஜிவ்'வென்று பறந்து போய், கூரையில் இன்னோர் இடத்தைப் பற்றிக் கொண்டு தொங்கிற்று. மறுபடியும் மிக மிக இலேசான இருமல் சத்தம்.

மணிமேகலை அவ்வாசற்படியில் நின்றபடியே, ''அடியே! சந்திரமதி!'' என்று உரத்த குரலில் கூறினாள்.

''ஏன் அம்மா?'' என்ற பதில் வந்தது.

''கை விளக்கு எடுத்துக் கொண்டு உடனே இங்கு வா!'' என்றாள் மணிமேகலை.

சற்றுநேரத்துக்கெல்லாம் ஒரு பணிப்பெண் கையில் விளக்குடன் வந்தாள்.

''இங்கேதான் நன்றாக விளக்கு எரிகிறதே? எதற்கு அம்மா, விளக்கு?''

''வேட்டை மண்டபத்துக்குள்ளே போய்ப் பார்க்க வேண்டும். ஏதோ ஓசை கேட்டது.''

''வௌவால் இறகை அடித்துக் கொண்டிருக்கும், அம்மா! வேறு என்ன இருக்கப் போகிறது?''

''இல்லையடி! சற்று முன் இந்தப் பளிங்குக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டிருந்தேன். திடீரென்று என் முகத்துக்குப் பக்கத்தில் இன்னொரு முகம் தெரிந்ததடி!''

''அந்த முகம் எப்படி இருந்தது? மன்மதன் முகம்போல் இருந்ததா? அர்ச்சுனன் முகம்போல் இருந்ததா?'' என்று கூறிவிட்டுப் பணிப்பெண் சிரித்தாள்.

''என்னடி, சந்திரமதி! பரிகாசமா செய்கிறாய்?''

''இல்லை, அம்மா, இல்லை! நீங்கள் அடிக்கடி கனவில் காண்பதாகச் சொல்வீர்களே? அவர்தான் இப்போது கண்ணாடியில் தோன்றினாரோ?''

''ஆமானடி, சந்திரமதி! ஆனால் ரொம்ப ரொம்ப நிஜம்போலிருந்தது.''



''எல்லாப் பெண்களுக்கும் இப்படித்தான் ஒரு சமயம் சித்தப் பிரமை பிடிக்கும். உங்களுக்கு இன்னும் இரண்டொரு நாள்தான் இப்படி இருக்கும். நாளைக்குக் காஞ்சியிலிருந்து வரும் இளவரசரைப் பார்த்து விட்டீர்களானால், அந்தப் பழைய முகம் அடியோடு மறந்து போய் விடும்.''

''அது இருக்கட்டுமடி! இப்போது இந்த வேட்டை மண்டபத்துக்குள் போய்ப் பார்க்கலாம், வா!''

''வீண் வேலை, அம்மா! வேட்டை மண்டபத்தில் ஒரே தூசியும் துப்புமாக இருக்கும். சேலை வீணாய்ப் போய்விடும்.''

''போனால் போகட்டுமடி!''

''இருமலும் தும்மலும் வரும். நாளைக்கு எல்லோரும் வரும் சமயத்தில்...''

''சும்மா வரட்டும்! வேட்டை மண்டபத்தை இப்போது சோதித்துப் பார்த்தேயாக வேண்டும்! விளக்கை அசைத்து அணைத்து விடாமல் எடுத்து வா!''

இவ்விதம் கூறிக் கொண்டே மணிமேகலை வேட்டை மண்டபத்துக்குள் பிரவேசித்தாள். தோழியும் விளக்குடன் அவளைத் தொடர்ந்து வந்தாள்.

இருவரும் சுற்றிப் பார்த்துக் கொண்டே வந்தார்கள். சந்திரமதி கையிலிருந்த தீபத்துக்கு மேலாக நோக்கி உயிர் அற்ற மிருகங்களை மட்டும் பார்த்துக் கொண்டே வந்தாள். மணிமேகலையோ சில சமயம் தரையிலும் பார்த்தாள். தரையில் படிந்திருந்த புழுதியில் அங்குமிங்கும் கால் சுவடுகள் இருந்ததைக் கவனித்துக் கொண்டாள்.

''அம்மா! அதோ!'' என்றாள் சந்திரமதி.

''என்னடி இப்படிப் பதறுகிறாய்?''

''அதோ அந்த வாலில்லாக் குரங்கு அசைந்தது போலிருந்தது!''

''உன்னைப் பார்த்து அதன் சந்தோஷத்தைத் தெரியப்படுத்தியதாக்கும்?''

''என்ன, அம்மா, என்னைக் கேலி செய்கிறீர்களே?''



''நான் பிரமை பிடித்து அலைகிறேன் என்று நீமட்டும் என்னைப் பரிகாசம் செய்ய வில்லையா?''

''ஒருவேளை உங்கள் கண்ணாடியில் தெரிந்த முகம் அந்தக் குரங்கின் முகம் தானோ என்னவோ? நாம் வந்த வாசலுக்கு நேரே இருக்கிறது பாருங்கள்!... குரங்கு மறுபடியும் அசைகிறது!''

''சீச்சீ! உன் விளக்கின் நிழலடி!- விளக்கின் நிழல் அசையும்போது அப்படிக் குரங்கு அசைவது போல் தெரிகிறது. வா, போகலாம்! இங்கே ஒருவரையும் காணோம்!''

''அப்படியானால் அந்தக் குரங்கு முகம்தான் கண்ணாடியில் தெரிந்திருக்க வேண்டும். இல்லாவிடில் அதோ மேலே உட்கார்ந்திருக்கிறதே, அந்த ஆந்தையின் முகமாக இருக்கலாம். அது நம்மைப் பார்த்து எப்படி விழிக்கிறது, பாருங்கள்!''

''என்னை ஏன் சேர்த்துக் கொள்கிறாய்? உன் அழகைப் பார்த்துச் சொக்கிப் போய்த்தான் அந்த ஆந்தை அப்படிக் கண் கொட்டாமல் பார்க்கிறது!''

''பின்னே, தங்களைக் கண்ணாடியில் எட்டிப் பார்த்த முகம் யாருடைய முகமாயிருக்கும்?''

''அடியே! எனக்குத்தான் சித்தப் பிரமை என்று நீ முடிவு கட்டி விட்டாயே? என் கனவில் அடிக்கடி தோன்றும் முகம் கண்ணாடியிலும் தோன்றியிருக்கலாம். அந்தச் சுந்தர முகத்தைப் பார்த்த கண்ணால் இந்தக் குரங்கையும் ஆந்தையையும் பார்க்க வேண்டி வந்ததே என்று எனக்குக் கஷ்டமாக இருக்கிறது. வாடி, போகலாம்! கண்ணாடியில் இன்னொரு தடவை அந்த முகம் தெரியுமா என்று பார்க்கிறேன்!''

இரண்டு பெண்களும் மறுபடியும் வந்த வழியே புகுந்து அந்தப்புர அறைக்குள் போனார்கள்.

**வா**யில்லாக் குரங்குக்குப் பின்னாலிருந்து வந்தியத் தேவன் வெளியில் வந்தான். இரண்டு மூன்று தடவை தும்மி மூக்கில் புகுந்திருந்த தூசி துப்பைகளைப் போக்கிக் கொண்டான்.

தன்னை அவ்வளவு நன்றாக மறைத்திருந்த வாயில்லாக் குரங்குக்குத் தனது நன்றியைச் செலுத்தினான்.

''ஏ குரங்கே! நீ வாழ்க! அந்தப் பணிப் பெண் என் முகத்தை உன் முகத்தோடு ஒப்பிட்டாள். அப்போது எனக்குக் கோபமாய்த்தான் இருந்தது. வெளியில் வந்துவிடலாமா என்றுகூட எண்ணினேன். நல்ல வேளையாய்ப் போயிற்று. மனத்தை அடக்கிக் கொண்டேன். நீ மட்டும் இங்கே ஆள் உயரத்துக்கு நின்றிராவிட்டால் என் கதி என்ன ஆகியிருக்கும்? அந்தப் பெண்களிடம் அகப்பட்டுக் கொண்டிருப்பேன்! குரங்கே! நீ நன்றாயிருக்க வேணும்!''

இப்படிச் சொல்லி முடிக்கும்போதே அந்தப் பெண்களிடம் அகப்பட்டுக் கொண்டிருந்தாலும் அப்படி ஒன்றும் விபரீதமாகப் போயிராது என்ற எண்ணம் அவன் மனத்தில் தோன்றியது. அவர்கள் யார் என்பதை முன்னமே யூகித்துக் கொண்டிருந்தான்.

அவர்கள் பேசிய வார்த்தைகள் யாவும் அவன் காதில் நன்றாக விழுந்தன. அதிலும் மணிமேகலை உரத்த குரலில் கணீர் என்று பேசினாள். கனவில் கண்ட முகத்தைப் பற்றியும் கண்ணாடியில் பார்த்த முகத்தைப் பற்றியும் அவள் ஏதோ பேசினாளே, அது என்ன? பழைய சம்பவங்கள் அவனுக்கு நினைவு வந்தன. கந்தமாறன் அடிக்கடி இவளிடம் தன்னைப் பற்றிப் பேசியிருப்பதாகச் சொல்லியிருக்கிறான். முன்தடவை இந்த மாளிகைக்கு வந்திருந்தபோது அவளை அரைகுறையாகப் பார்த்துச் சென்றதும், கந்தமாறன் அவளை வேறு பெரிய இடத்தில் மணம் செய்து கொடுக்கப் போவதாகச் சொன்னதும் ஞாபகத்துக்கு வந்தன. இந்தப் பேதைப் பெண் ஒருவேளை தன்னுடைய மனத்தை மாற்றிக் கொள்ளாமல் இருக்கிறாளா, என்ன....?

அதைப் பற்றி யோசிப்பதற்கு இப்போது நேரம் இல்லை. வெளியேறும் வழியைப் பார்க்க வேண்டும். யானை தந்தப் பிடியுள்ள வழி அந்தப்புரத்துக்குள் போகிறது. ஆகையால் அது தனக்குப் பயன்படாது. தான் வந்த வழியைத்தான் தேடிப் பிடிக்க வேண்டும். இரகசிய வழிகளின் கதவுகளை உள்ளேயிருந்து திறப்பதற்கும் வெளியிலிருந்து திறப்பதற்கும் வெவ்வேறு முறைகள் உண்டு என்பது அவனுக்குத் தெரிந்ததே. திறப்பது எப்படி என்று கஷ்டப்பட்டுக் கண்டு பிடிக்கலாம். ஆனால் இரகசிய வழி எங்கே இருக்கிறது என்று தெரிந்தால் அல்லவா திறப்பதற்கு வழி கண்டு பிடிக்கலாம்? சுவரை எவ்வளவு உற்று உற்றுப் பார்த்தாலும் ஒன்றும் தெரியவில்லை. வெளிச்சமும் போதவில்லை. தான் புகுந்த இடத்துக்குப் பக்கத்தில் முதலை ஒன்று கிடந்தது என்பது அவன் நினைவுக்கு வந்தது. அங்கே போய் அருகில் உள்ள சுவர்ப் பகுதியையெல்லாம் தடவிப் பார்த்தால் ஒருவேளை வெளியேறும் வழி புலப்படலாம்.

**இ**வ்வாறு நினைத்து முதலைக்கு அருகில் சென்று சுற்றுப் பக்கத்துச் சுவரையெல்லாம் தடவித் தடவிப் பார்த்தான்.

ஒன்றும் பயன்படவில்லை. நேரம் ஆக ஆகக் கவலை அதிகரித்து வந்தது. இது என்ன தொல்லை? நன்றாக இந்தச் சிறைச் சாலையில் அகப்பட்டுக் கொண்டோமே? கடவுளே! அந்தப்புரத்துக்குள் புகுவதைத் தவிர வேறு வழி இல்லைபோலிருக்கிறதே! அப்படி அந்தப்புரத்துக்குள் புகுந்தால் அதில் எத்தனை அபாயங்கள்! ஒருவேளை மணிமேகலை தன்னிடம் அநுதாபம் காட்டலாம். ஆயினும் அவளிடம் தான் இங்கே இப்படி இரகசியமாக வந்ததற்கு என்ன காரணம் சொல்வது? 'உன்னிடம் கொண்ட காதலினால் வந்தேன்!' என்று சொல்லலாமா? அது எவ்வளவு கொடூரமான பொய்யாயிருக்கும்? துணிந்து அத்தகைய பொய் சொன்னாலும் அவள் நம்புவாளா? மணிமேகலை மட்டும் தனியாக இருப்பாள் என்பது என்ன நிச்சயம்? மற்றப் பெண்பிள்ளைகளுக்கிடையில் அகப்பட்டுக் கொண்டால்...? சம்புவரையர் அறிந்தால் கட்டாயம் தன்னைக் கொன்றே போடுவார்!

மறுபடியும் வந்தியத் தேவனுடைய கவனம் தரையில் கிடந்த முதலையின் மீது சென்றது. அதன்பேரில் அவனுக்குக் கோபமும் வந்தது. "முதலையே! எதற்காக இப்படி வாயைப் பிளந்து கொண்டேயிருக்கிறாய்?" என்று சொல்லிக்கொண்டே அதை ஓங்கி ஓர் உதை உதைத்தான். உதைத்தபோது முதலை கொஞ்சம் நகர்ந்தது. அதே சமயத்தில் சுவர் ஓரமாகத் தரையில் ஒரு சிறிய பிளவு தெரிந்தது!

"ஆகா! நீதானா வழியை அடைத்துக்கொண்டிருக்கிறாய்? முட்டாள் முதலையே! முன்னாலே சொல்வதற்கு என்ன?" என்று சொல்லிக் கொண்டே வந்தியத் தேவன் குனிந்து முதலையைப் பிடித்து நகர்த்தினான். முதலை நகர நகரச் சுவர் ஓரத்தில் துவாரம் பெரிதாகி வந்தது. கீழே படிகளும் தெரிந்தன.

## எட்டாம் அத்தியாயம்

# இருட்டில் இரு கரங்கள்!

கடம்பூர் அரண்மனையில் இரகசிய வழிகளின் வாசல்கள் எவ்வளவு சாமர்த்தியமாக அமைக்கப்பட்டிருக்கின்றன என்பதை எண்ணி வந்தியத் தேவன் வியந்தான். அரை குறையாக அவற்றைக் குறித்து அறிந்தவன் அவசரமாக இறங்கவோ ஏறவோ முயன்றால் அபாயம் நேரலாம். பாதிப் படிகளில் இறங்கும் போது முதலை நகர்ந்து விட்டால் சுவர் இடுக்கில் அகப்பட்டுக் கொண்டு திண்டாட வேண்டியதாகும். முதலை அசையாமல் நிற்கிறதா என்று நிதானித்துப் பார்த்துவிட்டு வந்தியத்தேவன் துவாரத் தண்டை வந்து கீழே கால் வைக்கப் போனான். ஆ! அது என்ன பில வழியில் காலடிச் சப்தம் கேட்கிறதே! வருகிறது யாராயிருக்கலாம்? ஒருவேளை ஆழ்வார்க்கடியானாயிருக்குமோ? தன்னைத் தேடி வருகிறானோ? அவன் இங்கு வந்து சேராமல் தடுத்து விடுவதே நல்லது. இல்லை, இல்லை! வருகிறவன் ஒருவன் இல்லை! ஐந்தாறு பேர் வருவது போல் காலடிச் சத்தம் கேட்கிறது. அப்படியானால் இடும்பன்காரியும், அவனுடைய கூட்டாளிகளுமாயிருக்கலாம். வந்தியத் தேவன் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து சென்று மறுபடியும் வாலில்லாக் குரங்கின் பின்னால் மறைந்து கொண்டான். ஆகா! இரகசிய வழியைத் திறந்து வைத்து விட்டு வந்து விட்டோமே! அதனால் ஏதேனும் சந்தேகம் ஏற்படுமோ? இல்லை, இல்லை. நாம் வரும்போது அந்த வழி திறந்துதானிருந்தது. நாம் மேற்படியில் ஏறிய பிறகுதான் வழி மூடிக் கொண்டது. ஆகையால் திறந்திருப்பதே நல்லதாய்ப் போயிற்று. அதோ துவாரத்தின் வழியாகத் தலை ஒன்று தெரிகிறது. இடும்பன்காரியின் தலைதான். இதோ மேற்படியில் ஒரு காலை வைத்து நின்று சுற்று முற்றும் அவன் பார்க்கிறான். ஒரு கால் மட்டும் கீழே இருக்கிறது. துவாரம் தானாக மூடிக் கொள்ளாமல் இருக்கும்பொருட்டு அப்படி அவன் ஒரு காலைக் கீழ்ப்படியில் வைத்துக் கொண்டிருக்கிறான் போலும்!

அடடே! இந்தப் பக்கத்தில் என்ன வெளிச்சம்! சுவரில் யானை முகம் இருந்த இடத்தை விட்டுப் பெயர்கிறதே! அந்தப்புர வழி புலப்படுகிறதே! அந்த வாசல் வழியாக வருகிறது யார்? அதோ மணிமேகலை யல்லவா தானே கையில் விளக்கு ஏந்திக் கொண்டு வருகிறாள்?

இடும்பன்காரி ஒரே பாய்ச்சலில் மேலேறி வருகிறான். அவன் வந்த வழி மூடிக் கொள்கிறது. இடும்பன்காரி தன் தலைப்பாகைத் துணியை எடுத்துக் கொண்டு அருகில் இருந்த புலியின்மேல் உள்ள தூசை அவசரமாகத் தட்டத் தொடங்குகிறான்! இந்த நாடகத்தின் முடிவுதான் என்ன?

## ஒரு புதிர்

பார்த்தால் — பூதம்
பாய்ந்தால் — புலி
வளர்த்தால் — பூனை

அது என்ன? 16ம் பக்கம் பார்க்கவும்

மணிமேகலை கைவிளக்கைத் தூக்கிப் பிடித்து நாலாபுறமும் பார்த்தாள். இடும்பன்காரியின் மீது அவள் பார்வை விழுந்ததும் அவனை அதிசயத்துடன் நோக்கினாள்.

இடும்பன்காரி தூசு தட்டுவதை நிறுத்திவிட்டுப் பதிலுக்கு மணிமேகலையை வியப்புடன் பார்த்தான்.

''தாயே! இது என்ன? இந்த வேளையில் இங்கு எதற்காக வந்தது?'' என்றான்.

''இடும்பா! நீதானா? என்ன செய்து கொண்டிருக்கிறாய்?'' என்று மணிமேகலை வினவினாள்.

''அம்மா! நாளை வருகிற விருந்தாளிகளை இந்த வேட்டை மண்டபத்துக்கு அழைத்துக் காட்ட வேண்டியிருக்குமல்லவா? அதற்காகச் சுத்தம் செய்து கொண்டிருக்கிறேன். சின்ன எஜமான் காஞ்சிக்குப் போகும்போது அவ்விதம் கட்டளையிட்டுச் சென்றார்கள்.''

''ஆம், இடும்பா! இந்த அரண்மனையிலேயே சின்ன எஜமானுக்கு உன்னிடமும் என்னிடமும்தான் நம்பிக்கை. பழுவூர் ராணியம்மாள் தங்கப் போகிற அறையில் ஏற்பாடு சரியாக இருக்கிறதா என்று பார்த்துக் கொண்டிருந்தேன். இப்போது இங்கே ஏதோ சத்தம் கேட்டது. நீயாகத்தான் இருக்கும் என்று நினைத்தேன். வேறு யாருக்கு இந்த அரண்மனையின் இரகசிய வழிகள் தெரியும்? எத்தனை நேரமாக நீ இங்கே வேலை செய்து கொண்டிருக்கிறாய்?''

''ஒரு நாழிகைக்கு மேலே இருக்கும், தாயே! இன்னும் ஒரு நாழிகை வேலை இருக்கிறது. தாங்கள் தனியாகவா இங்கே வந்தீர்கள்? அந்த வாயாடிப் பெண் சந்திரமதி எங்கே?''

''ஏதோ சத்தம் கேட்கிறது என்று நான் அவளைப் போய்த் தந்தையை அழைத்து வரச் சொன்னேன். நீதானே இங்கு இருக்கிறாய்? நான் போய் அவளைத் தடுத்து நிறுத்திவிடுகிறேன்.''

இவ்விதம் சொல்லிக் கொண்டே மணிமேகலை விளக்கைத் தூக்கிப் பிடித்து இடும்பன்காரியின் முக மாறுதலைக் கவனித்தாள். அடுத்தாற்போல் வாலில்லாக் குரங்கை நோக்கினாள். முன்னொரு தடவை அசைந்தது போல் அது அசைந்ததையும் பார்த்துக் கொண்டாள்.

''ஆம், தாயே! எஜமானுக்கு இன்று எவ்வளவோ அலுவல். தாங்கள் போய் அவரைக் கூப்பிட வேண்டாம் என்று சொல்லிவிட்டு நிம்மதியாகப் படுத்துக் கொள்ளுங்கள். எல்லா வேலைகளையும் நானே பார்த்துக் கொள்ளுகிறேன்'' என்றான் இடும்பன்காரி.

மணிமேகலை மறுபடியும் வந்த வழியே உள்ளே போனாள். இரகசியக் கதவு மூடிக் கொண்டது.

இடும்பன்காரி யானை முகத்தினருகில் சென்று சற்று நேரம் சுவரண்டை காது கொடுத்து உற்றுக் கேட்டான். அடுத்த அறையில் சத்தம் ஒன்றும் இல்லை என்று நிச்சயம் அடைந்த பிறகு திரும்பி வந்தான். பிலத்துவாரத்தைத் திறந்து வைத்துக் கொண்டு இடுப்புவரை கீழே படிகளில் இறங்கி நின்று கொண்டான்.

பிலத்துவாரத்தின் உட்புறமிருந்து ஆந்தையின் குரல் கேட்டது. பதிலுக்கு இடும்பன்காரி ஆந்தைக் குரல் ஒன்று கொடுத்தான்.

பில வழியில் ஆட்கள் நடந்து வரும் சத்தம் கேட்டது.

பின்னர் காரியங்கள் வெகு துரிதமாக நடைபெற்றன.

வௌவால் ஒன்று சடசடவென்று சிறகை அடித்துக் கொண்டு பறந்தது.

இடும்பன்காரி அதைப் பார்த்தான். பின்னாலிருந்து அவன் பேரில் வாலில்லாக் குரங்கு தடாலென்று விழுந்தது.

அது திடீரென்று விழுந்த வேகத்தினால் இடும்பன்காரியின் முழங்கால்கள் மடிந்து அவன் தடுமாறினான். அதனால் இன்னும் இரண்டு படிகள் அவன் கீழே இறங்க வேண்டியதாயிற்று.

தன் பேரில் விழுந்தது இன்னதென்று முதலில் இடும்பன்காரிக்குத் தெரியாமையால் அவன் உளறியடித்துக் கொண்டு கைகளை வீசி உதறினான்.

பிறகு உயிரற்ற வாலில்லாக் குரங்கு எப்படியோ தவறித் தன் பேரில் விழுந்திருக்கிறது என்று தெரிந்தது. மனத்தைத் தைரியப்படுத்திக் கொண்டு அதைத் தூக்கி நிறுத்தப் பார்த்தான்.

இதற்குள் உயிருள்ள மனிதனுடைய கரங்கள் போன்ற இரண்டு கரங்கள் மேலேயிருந்து துவாரத்துக்குள் வந்து அவனை இன்னும் கீழே தள்ளி அமுக்கின.

இடும்பன்காரியினால் அதை நம்பவே முடியவில்லை. ஒரு கணம் அவனைப் பெரும் பீதி பிடித்துக் கொண்டது.

மறுபடியும் மேலும் கீழும் பார்த்தான்.

வாயில்லாக் குரங்கு தலை கீழாகத் துவாரத்தின் வழியில் இறங்கி யிருப்பதையும் அதன் பாதி உடம்பு வரையில் கீழே வந்தபிறகு துவாரக் கதவு நெருங்கி வந்திருப்பதையும் கவனித்தான்.

இரண்டு மனிதக் கரங்களாகத் தோன்றியவை தன்னுடைய மனப் பிராந்தியாகத்தான் இருக்க வேண்டும் என்று நிச்சயம் செய்து கொண்டான். இதற்குள் பிலத்துவாரத்தில் வந்தவர்கள் நெருங்கி வந்து விட்டார்கள். முன்னால் வந்த ரவிதாஸன், "அப்பனே! என்ன இது? எதற்காக இப்படி உளறி அடித்துக் கொண்டு அலறினாய்? அபாயம் ஏதேனும் உண்டா? நாங்கள் திரும்பிப் போகவா?" என்று கேட்டான்.

"வேண்டாம்! வேண்டாம்! அபாயம் ஒன்றுமில்லை. பிலத் துவாரக் கதவைத் திறக்கும்போது அந்த ராட்சதக் குரங்கு எப்படியோ இடம் பெயர்ந்து என் தலையில் விழுந்து விட்டது. ஒரு கணம் நானும் பீதியடைந்து விட்டேன். இப்போது இந்தக் குரங்கு மேலேயும் போகாமல் கீழேயும் வராமல் வழியை அடைத்துக் கொண்டிருக்கிறது. கொஞ்சம் பொறுங்கள்; இந்தக் குரங்கை அகற்றி வழியைச் சரிப்படுத்தி விடுகிறேன்" என்றான் இடும்பன்காரி.

* * *

தடுமாறி விழுந்த இடும்பன்காரியை மேலே யிருந்து அமுக்கித் தள்ளிய கரங்கள் யாருடைய கரங்கள் என்பதை நேயர்கள் ஊகித்திருப்பார்கள். வந்தியத்தேவனுடைய அதிர்ஷ்டம் இச் சந்தர்ப்பத்திலும் அவன் பக்கம் இருந்தது. சரியான சமயத்தில் அவனுக்குச் சரியான யுக்தி தோன்றியது. இடும்பன்காரி பிலத் துவாரத்தின் படிகளில் நின்றபடி வெளவாலைப் பார்த்த தருணத்தில் அவன் தலைமீது வாயில்லாக் குரங்கைத் தள்ளினான். பிறகு அவன் தன்னுடைய முகத்தைப் பார்க்க முடியாதபடி நின்றுகொண்டு கைகளினால் அவனைப் பிடித்துக் கீழே அமுக்கினான். அதன் பின்னர் வாயில்லாக் குரங்கையும் தலைகீழாகத் துவாரத்தினுள் தள்ளினான். கடைசியாக, முதலையையும் நகர்த்தி விட்டான்.

இவ்வளவையும் சில கண நேரத்தில் செய்து முடித்து விட்டு வந்தியத்தேவன் யானை முகத்தண்டை ஓடினான். யானைத் தந்தங்களைப் பிடித்துத் தன் பலம் கொண்ட மட்டும் அழுத்தித் திருப்பினான்.



## விளையாட்டுக்குள் ஒரு விளையாட்டு

### விநோத சம்பிரதாயம்!

தென் ஆப்பிரிக்கக் கோஷ்டி 1951ல் இங்கிலாந்துக்குக் கிரிக்கெட் ஆட வந்தது. லார்ட்ஸில் தென் ஆப்பிரிக்க ஆட்டக்காரர்கள் பயிற்சி பெற்றுக்கொண்டிருந்தார்கள். பெவிலியனிலும் சில ஆட்டக்காரர்களும் ஒரு லாரி டிரைவருடன் உரையாடிக் கொண்டிருந்தனர். அச்சமயம் லார்ட்ஸின் புனிதம் கெடும்படியான சம்பவம் ஒன்று நிகழ்ந்து விட்டதாகக் கருதி, ஸ்டாண்டுக்கு வர்ணம் அடிக்கும் பணியாளர் வெகு வேகமாக ஓடி வந்தார்.

"லார்ட்ஸிலேயே இதுவரை நிகழாத ஒரு சம்பவம் நிகழ்ந்து விட்டது!" என்று குதிப்பிட்டார் அவர். ஆட்டக்காரர்கள் நாலாபுறமும் சுற்றிப் பார்த்தார்கள். 'எல்லாம் ஒழுங்காகத்தானே இருக்கின்றன!' என்றனர்.

"லார்ட்ஸ் மைதானத்தை ஒரு பெண்மணி கடந்து செல்வது இதுதான் சரித்திரத்தில் முதல் தடவை! விளையாட்டு மைதானத்தைக் கடக்கப் பெண்மணிகளை அனுமதிப்பதில்லை. அதை நிறுத்த வேண்டும்!" என்றார் அந்தப் பணியாளர். தென் ஆப்பிரிக்கக் காப்டன் நார்ஸ்-ம் புல்லர் என்ற ஆட்டக்காரரும் ஒரு பிரமுகரோடும், ஒரு பெண்மணியோடும் லார்ட்ஸ் மைதானத்தில் உல்லாசமாக நடந்து சென்றார்கள்!

வர்ணமடிக்கும் பணியாளர் இப்படிக் குறைப்பட்டுக்கொண்டிருக்கும்போதே கிரிக்கெட் கண்காணிக்கும் பணியாளர் ஓடிவந்து பிரமுகரையும், பெண்மணியையும் மைதானத்தை விட்டு அப்புறப்படுத்தி விட்டார். பெண்மணிகள் லார்ட்ஸ் கிரிக்கெட் ஆடும் மைதானத்தில் நடக்கக் கூடாது என்பது சம்பிரதாயம்!

— குண்டுமணி

சுவரில் வழி உண்டாயிற்று. ஆனால் மணிமேகலை உள்ளிருந்து வந்தது போன்ற விசாலமான வழி அல்ல. வட்டவடிவமான குறுகலான வழி. அது கதவுக்குள் கதவா யிருக்கலாம். முழுக் கதவையும் திறப்பது எப்படி என்று யோசிக்க அது சமயம் அல்ல. அதற்குள் சதிகாரக் கூட்டம் வேட்டை மண்டபத்துக்குள் புகுந்து விடலாம். பிறகு தான் தப்புவது துர்லபமாகி விடும்.

ஆகவே திறந்த வழி குறுகலான வழியாக இருந்தாலும் அதற்குள் புகுந்துவிட வேண்டியதுதான்.

தீர்மானித்த படியே காரியத்தை நிறைவேற்றத் துணிந்து அந்த வட்ட வடிவமான துவாரத்தில் வந்தியத்தேவன் புகுந்தான். அவனுடைய தலையும் கைகளும் பாதி உடம்பும் உள்ளே வந்து விட்டன. மிச்சம் பாதி



## பூதம் – புலி – பூனை

கால்பந்தாட்ட மைதானத்தைப் போல் இரண்டு மடங்கு அகலமும் 20 மாடிக் கட்டிடத்தின் உயரமும் கொண்ட ராட்சத நிலக்கரி இயந்திரம் ஒன்று மேற்கு ஜெர்மனியில் தயாரிக்கப்பட்டிருக்கிறது. 630 அடி அகலமும் 220 அடி உயரமும் கொண்ட இந்த எஃகு ராட்சத இயந்திரம் ஒரு நாளைக்கு 20 மணி நேரம் இயக்கி, 1,10,000 டன் நிலக்கரியைத் தோண்டிக் குவித்துவிடும். இதைக் கொண்டு செல்ல 30 மைல் நீள ரயில் வண்டி தேவைப்படும். இந்த ராட்சத இயந்திரத்தை இயக்க ஏழுபேர் போதும்!

— பூ. பி. எஸ்.

உடம்பு உள்ளே புகுவது பிரயாசையாக இருந்தது. கைகளினால் தாவிப் பிடித்துக் கொள்ள ஒன்றும் அகப்படவில்லை. இச்சமயத்தில் உள்ளே யிருந்த தீபமும் அணைந்து இருள் சூழ்ந்தது.

வந்தியத்தேவன் அபயம் கேட்கும் குரலில், ''சந்திரமதி! சந்திரமதி! என்னைக் காப்பாற்று!'' என்றான்.

கலகலவென்று சிரிக்கும் பெண்ணின் குரல் கேட்டது.

''சந்திரமதி! நீ இங்கே இருந்து கொண்டுதானா வேடிக்கை பார்க்கிறாய்? இது நன்றாயிருக்கிறதா?''

அதற்குப் பதிலாக மறுபடியும் சிரிப்பு. அதைத் தொடர்ந்து ''நீ இப்படி அந்தப்புரத்தில் திருட்டுத்தனமாக நுழைவது மட்டும் நன்றாயிருக்கிறதா?'' என்று ஒரு பெண்ணின் குரல் கேட்டது.

அது மணிமேகலையின் குரல் என்று வந்தியத் தேவன் தெரிந்துகொண்டான்.

ஆயினும் வேண்டுமென்றே ''சந்திரமதி! நீ வரச் சொன்னதினால்தானே வந்தேன்! பின்னால் ஆட்கள் வருகிறார்கள். சீக்கிரம் என்னை எடுத்துவிடு. இல்லா விட்டால் விபரீதம் வரும்'' என்றான்.

''சந்திரமதி இவ்வளவு கெட்டிக் காரியா? இருக்கட்டும்; உனக்கும் அவளுக்கும் சேர்த்துப் புத்திகற்பிக்கிறேன்!''

''ஓஹோ! தாங்கள் இளவரசி மணிமேகலையா? அம்மணி! இந்த ஒருதடவை மட்டும் என்னை மன்னித்துக் காப்பாற்றி விடுங்கள்! இனிமேல் இம்மாதிரி தப்புக் காரியம் செய்ய மாட்டேன்! உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு!'' என்று கெஞ்சினான் வந்தியத்தேவன்.

இருளில் இரு மெல்லிய கரங்கள் வந்தியத் தேவனுடைய தோள்களைப் பிடித்துத் தாங்கி மெள்ள மெள்ளக் கீழே தரையில் இறக்கி விட்டன. சுவரில் தோன்றிய துவாரம் மூடிக் கொண்டது.

''இளவரசி! உங்களுக்கு அனந்த கோடி வந்தனம்!'' என்றான்.

''கொஞ்சம் பொறு! நான் உன்னை என்ன செய்யப் போகிறேன் என்று தெரிந்துகொண்டு வந்தனம் செலுத்து!''

''தாங்கள் என்னை என்ன செய்தாலும் சரிதான்! கொலைகாரர்களிடமிருந்து என்னைத் தப்புவித்தீர்களே, அதுவே போதும்! அந்த அரக்கர் கைகளினால் சாவதைக் காட்டிலும் தங்களுடைய மணிக் கரத்தினால் சாகும்படி நேர்ந்தால் அது என்னுடைய பாக்கியம் தான்!''

''அடேயப்பா! பெரிய வீராதி வீரனாயிருக்கிறாயே! அப்படி உன்னைத் தேடி வரும் கொலைகாரர்கள் யார்? கொஞ்சம் பொறு! முதலில் விளக்கு ஏற்றி உன் முகம் எப்படி இருக்கிறது என்று பார்க்கிறேன்!''

''அம்மணி! என் முகத்தை மறுபடியும் பார்க்க வேண்டுமா? தாங்கள் கண்ணாடியில் பார்த்துக் கொண்டபோது பின்னால் நின்று பார்த்த குரங்கு முகம்தான் என் முகம்! சந்திரமதிதான் வர்ணித்தாளே!'' என்றான் வந்தியத்தேவன்.

இருட்டில் சிரிப்பின் ஒலியும் கைவளைகள் குலுங்கும் ஓசையும் கேட்டன.

வந்தியத்தேவன் அந்த அறைக்குள் தலையை நீட்டியபோது அந்த அறையில் எரிந்து கொண்டிருந்த விளக்கை மணிமேகலை மூடிவிட்டாள். அதனால் இருட்டாயிற்று. இப்போது அதன் மூடியை அகற்றியதும் தீபம் சுடர் விட்டு ஒளிர்ந்தது. அதன் ஒளியில் வந்தியத் தேவனுடைய முகத்தைப் பார்த்த வண்ணம் மணிமேகலை மெய்மறந்து நின்றாள்.

பக்கத்து வேட்டை மண்டபத்துக்குள் தடதடவென்று பலர் பிரவேசிக்கும் சத்தம் அச்சமயம் கேட்டது. (தொடரும்)



# விவா

பகலில் உடலுக்கு உரமூட்டும்...
இரவில் நிம்மதியூட்டும்!



காலையில் விவா: பகல் முழுவதும் நீங்கள் உயிர்த் துடிப்புடன் விளங்குவீர்கள்! விவாவிலுள்ள ஆடைப்பால் செழுமையாக்கப்பட்டுள்ளது—மால்ட் கோதுமை மற்றும் புரதச் சத்துக்கள் சேர்க்கப்பட்டு. இதைப் பருகினால், நீங்கள் நாள் முழுவதும் சக்திபெற்று உற்சாகமுடன் திகழ்வீர்கள்!

படுக்கும்போது விவா: இரவு முழுவதும் நிம்மதியுடன் உறங்குவீர்கள்! விவாவின் புத்துணர்வூட்டும் சுவையும், ஊட்டப் பொருள்களும் உங்கள் திசுக்களுக்கு உரமூட்டி, நரம்புகளுக்கு இதமூட்டி, தசைகளுக்கு நலமூட்டுகின்றன. நீங்கள் நிம்மதியுடன் தூங்கி, காலையில் தெம்புடன் எழுவீர்கள்!

விவா, எளிதில் ஜீரணமாகக்கூடிய உணவுப் பானம்...பலவீனமானவருக்கும் உடல் தேறி வருபவருக்கும் சஞ்சீவி!

**பருகுங்கள் விவா—ஆரோக்கியமூட்டும் நீரோ பாலோ கலந்தால் இன்சுவையூட்டும்,**






ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிட்

''ஹிமவான் கூறியதைக் கேட்டதும் துந்துபி வாலியின் நகரத்துக்குச் சென்றான். கிஷ்கிந்தை வாயிலில் பெரிய அட்டகாசம் செய்தான். மரங்களைத் தள்ளிக் கோட்டை வாயிலைத் தன் கொம்புகளால் இடித்துப் பெருங் கர்ஜனை செய்து, வாலியை 'வா, வெளியே! உனக்குப் பலம் இருப்பது உண்மையானால் என்னுடன் போர் செய்' என்றான்.

''அந்தப்புரத்தில் சுகமாகப் படுத்திருந்த வாலி இந்தச் சப்தத்தைக் கேட்டான். உடனே எழுந்து வந்தான். அவனுடன் ஸ்திரீகளும் அச்சமயம் சென்றார்கள். வெளியே வந்து, 'துந்துபி! ஏன் இம்மாதிரி என் நகரத்து வாயிலில் கோஷமிடுகிறாய்? உயிரோடு இருக்க உனக்கு ஆசை இருந்தால் இவ்விடத்தை விட்டுச் செல்' என்றான்.

''இப்படி வாலி தன்னை அலட்சியமாகப் பேசியதைக் கேட்ட துந்துபி மிகக் கோபம் கொண்டு, 'உன்னுடைய மனைவிகளுக்கு எதிரில் ஜம்பமாகப் பேசாதே! போருக்கு வந்திருக்கிறேன். உனக்கு வீரியம் இருக்குமாயின் என்னுடன் யுத்தம் செய். வீண் பேச்சு வேண்டாம். இப்போது நீ படுக்கையிலிருந்து மயக்கமாக வந்திருக்கிறாய். காலைவரையில் நான் காத்திருக்கச் சம்மதிக்கிறேன். கள்ளைக் குடித்துப் பலம் இழந்தவனைத் தாக்குவது பாபமாகும். இந்த ராத்திரி நீ எல்லாச் சுகங்களையும் அனுபவித்து விடு. எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டு சரியான நிலையில் வா. உன்னை வதம் செய்வேன்' என்றான்.

''துந்துபியின் வார்த்தைகளைக் கேட்ட வாலி சிரித்துவிட்டுச் சொன்னான்: 'பெண்களே! நீங்கள் போங்கள். அசுரனே! நான் மயக்கத்தில் இல்லை. யுத்தத்துக்கு முன் அருந்தும் உற்சாக பானம்தான் குடித்து வந்திருக்கிறேன் என்று வைத்துக் கொள். போர் செய்ய விரும்புகிறாயானால் இப்போதே போர் செய்யலாம்' என்று சொல்லி மகிஷாசுரனுடைய வாலைப் பிடித்துக் கரகரவென்று அவனைச் சுழற்றி வீசி எறிந்தான். ரத்தம் கக்கிக் கொண்டு அசுரன் கீழே விழுந்தான்.

''பிறகு சமாளித்துக் கொண்டு அசுரன் எழுந்தான். இருவருக்கும் பெரும் போர் நடந்தது. இந்திரனுடைய புத்திரனான வாலி மகிஷாசுரனை இடித்து இடித்துக் கொன்றான். செத்து விழுந்த அசுரனை வாலி எடுத்துத் தூக்கி எறிந்தான். அது ஒரு யோசனை தூரம் போய் விழுந்தது.

''எறியப்பட்ட அசுரனுடைய தேகத்திலிருந்து ரத்தத் துளிகள் காற்றால் வீசப்பட்டு மதங்க முனிவர் ஆசிரமத்தின் மேல் விழுந்தன. முனிவர் யார் இதைச் செய்தது என்று கோபம் கொண்டு பார்த்தார். நடந்ததை உடனே அறிந்து கொண்டார்.

''கர்வம் கொண்டு இம்மாதிரி ஒரு சவத்தை விட்டெறிந்து ஆசிரமத்தின் பேரில் அசுத்தமான ரத்தத் துளிகள் விழச் செய்தானே என்று வாலியை முனிவர் சபித்து விட்டார். 'இந்த ஆசிரமத்துப் பூமியில் அவன் பிரவேசித்தானானால் உயிர் நீப்பான்' என்று சாபமிட்டார். இதனால்தான் ராமனே, நானும் என் மந்திரிகளும் இவ்விடம் வந்து க்ஷேமமாக இருக்கிறோம். வாலி இவ்விடம் வருவதற்கில்லை. மற்ற எந்த இடம் சென்றாலும் அவனுடைய தொந்தரவு உண்டாகும்.

''ரிஷியின் சாபத்தால் இந்த எல்லைக்குள் பிரவேசிப்பதற்குப் பயப்படுகிறான். இந்த ஆச்சா மரங்களைப் பார். வாலி இந்த மரங்களில் ஒன்றைத் தன் கையால் பிடுங்கி ஓர் அசைப்பு அசைத்தால் மரத்தில் உள்ள அவ்வளவு இலைகளும் உதிர்ந்து போகும். அவனுடைய பராக்கிரமம் இவ்வாறு இருக்க அவனுடைய விரோதத்தைச் சம்பாதித்த நான் எப்படித் தைரியமாக இருக்க முடியும்?'' என்றான் சுக்ரீவன்.

லக்ஷ்மணன் சுக்ரீவனுடைய பயத்தையும், அவன் இம்மாதிரி வாலியின் பலத்தைக் குறித்துப் பேசி வந்ததன் நோக்கத்தையும் நன்றாக உணர்ந்து கொண்டான்.

''சுக்ரீவனே! உன் சந்தேகம் தீர ராமனுடைய பலத்தையும் நீ பார்க்கலாம்'' என்றான்.

''சந்தேகம் எனக்கில்லை. சாம்பல் பூத்த நெருப்பைப் போன்ற ராமனுடைய பலத்தை நான் அறிந்தவனேயாவேன். ராமனை நான் சரணமடைந்தேன். ஆனாலும் வாலியின் பல பராக்கிரமத்தைப் பிரத்யட்சமாகப் பார்த்த நான் அவனை நினைக்கும்போதெல்லாம் நடுங்குகிறேன். அவ்வளவே'' என்றான் சுக்ரீவன்.

இப்படிச் சுக்ரீவனுடைய பக்தியையும், சரணடைந்து விட்ட நிலையையும், வாலியை நினைத்துப் பயப்படுவதையும் பார்த்த ராமன், அவனுடைய சந்தேகத்தை நிவர்த்தி செய்வதே சரி என்று எண்ணித் தன் கால் கட்டை விரலால் துந்துபியின் பிரேதம் — ஒரு மலைபோல் கிடந்ததை நெம்பி விளையாட்டாகத் தூக்கி எறிந்தான். பிரேதம் பத்து யோசனை தூரம் போய் விழுந்தது.

பிறகு அதுவும் போதாதென்று ராமன் தன் வில்லைக் காதுவரை இழுத்து வளைத்து ஒரு சரத்தை விட்டான். சுக்ரீவன் காட்டிய ஆச்சா மரத்தையும் அதன் பின் நின்ற ஆறு ஆச்சா மரங்களையும் சேர்த்துத் துளைத்து விட்டது.

ஏழு மரங்களையும் துளைத்த அந்தத் தங்கக் கட்டுச் சரம் பூமியில் புகுந்தது. பிறகு திரும்பி ராமச்சந்திரனுடைய தூணியில் வந்து சேர்ந்தது.

இதையெல்லாம் கண்ட சுக்ரீவன் பரவசமாய்ப் போனான். வாலியின் வஜ்ஜிர தேகம் ராமனுடைய சரத்தால் பிளக்கப்படும் என்று நிச்சயமடைந்தான். வானர ராஜன் அப்படியே சாஷ்டாங்கமாகத் தரையில் விழுந்து ராமனை நமஸ்கரித்து, ''உன் பராக்கிரமத்தைக் கண்ணாரக் கண்டேன். தேவ கணங்கள் அவ்வளவு பேரும் இந்திரனைத் தலைமை கொண்டுவந்து நின்று உன்னை எதிர்த்தாலும் உன் வெற்றி நிச்சயம். இனி வாலியைப் பற்றி என்ன பேச்சு? உன்னுடைய நட்பை அடைந்த என் துயரம் இன்றே தீர்ந்து விட்டது. உடனே வாலியை அழித்து விட்டு என்னைக் காப்பாற்றுவாய். இன்றே கிஷ்கிந்தை செல்வோம்'' என்றான்.

லக்ஷ்மணனும் சம்மதித்தான். ''அப்படியே ஆகட்டும்!'' என்றான் ராமன். கிஷ்கிந்தைக்குச் சென்றார்கள். சுக்ரீவன் முந்திச் சென்றான். ராமன் பின்னால் சென்று அடர்ந்த காட்டில் ஒரு மரத்துக்குப் பின் நின்றான்.

**சு**க்ரீவன் ஒரு பெரும் கர்ஜனை செய்தான். அதைக் கேட்ட வாலி பெருங் கோபத்துடன் மலைக் கோட்டையிலிருந்து உதய சூரியனைப் போல் தேஜஸுடன் வெளியே வந்தான். இருவரும் கச்சை இழுத்துக் கட்டிக் கொண்டு கை கலந்தார்கள். உக்கிரமான முஷ்டி யுத்தம் நடந்தது.

இப்படிக் கோர யுத்தம் நடந்து கொண்டிருக்கையில் வில்லைப் பிடித்து மறைந்து நின்ற ராமன் திகைத்தான். இருவரும் ஒருவரோடு ஒருவர் கலந்து யுத்தம் செய்ய ஆரம்பித்ததும் யார் சுக்ரீவன், வாலி யார் என்று ராமனால் உணர முடியவில்லை. இருவரும் ஒரே வடிவம், ஒரே விதமான ஆபரணங்கள் பூண்டு, ஒரேவிதமான பராக்கிரமத்துடன் மல் யுத்தம் நடத்திக் கொண்டிருந்தார்கள். ஆனபடியால் யார் வாலி என்று தெரிந்து கொள்ள முடியாமல் போயிற்று. கொல்லும் சரத்தைப் பிரயோகிக்க இடமில்லாமல் போயிற்று.

இதற்கிடையில் சுக்ரீவன் மிக அடிபட்டு, ராமன் ஒன்றும் செய்யவில்லையே என்று ஏமாற்ற மடைந்து, தன் உயிர் போகும் என்று பயந்து ரிஷ்யமூக வனத்துக்கு ஒரே ஓட்டமாக ஓடினான்.

''இன்று பிழைத்தாய், போ'' என்று வாலி, தம்பி சுக்ரீவனை நோக்கிச் சொல்லி விட்டுத் தன் கோட்டைக்குள் சென்றான்.

ராம லக்ஷ்மணர்கள் அடிபட்டும் துக்கப்பட்டும் நின்ற சுக்ரீவனிடம் வந்து சேர்ந்தார்கள். வானர ராஜன் ராமனை நேரில் பார்க்காமல் தரையைப் பார்த்துப் பேசினான். சொன்ன சொல்லைத் தவறினான் என்பது சுக்ரீவனுடைய கோபம்.

''வாலியைக் கொல்ல நான் பிரியப்படவில்லை என்று முந்தியே என்னிடம் சொல்லி விட்டிருந்தாயானால் நன்றாக இருந்திருக்கும் அல்லவா? என்னை ஏன் வாலியைப் போருக்கு அழைக்கச் சொன்னாய்?'' என்றான் சுக்ரீவன்.

''சுக்ரீவனே! கோபிக்க வேண்டாம். நான் சொல்லுவதைச் சாவதானமாகக் கேட்க வேண்டும்'' என்றான் ராமன். ''நான் பாணம் விடாததற்குக் காரணம் சொல்லுகிறேன். நீயும் வாலியும் அலங்காரம், வேஷம், உயரம், பருமன், நடை எல்லாவற்றிலும் ஒரே மாதிரி இருந்தீர்கள். போர் ஆரம்பித்து விட்ட பிறகு உங்களில் யார் வாலி, யார் சுக்ரீவன் என்று தெரிந்து கொள்ள முடியாத நிலையில் நான் திகைத்து நின்றேன். நான் பாணத்தை விட்டு வாலிக்குப் பதில் உன்னைக் கொன்று விட்டேனானால் என்னவாகும்? சகோதரர்களாகிய நீங்கள் போட்ட கர்ஜனைகள், முகத்தின் காந்தி, யுத்தம் செய்த முறை எல்லாவற்றிலும் ஒருவனைப் போலவே மற்றொருவனும் கொஞ்சம்கூட வித்தியாசமின்றி இருந்தீர்கள். இந்த நிலையில் நான் ஏதும் செய்ய முடியாமல் நிற்க வேண்டியதாயிற்று. வாலி என்று எண்ணி உன்னைக் கொன்றுவிட்டேனானால் அப்புறம் என் கதி என்ன? பிழைப்பிக்க வந்து கொன்றுவிட்ட மூடனும் பாபியும் ஆவேனல்லவா? கோபிக்காதே சுக்ரீவா! மறுபடியும் வாலியை அறைகூவி அழைப்பாய். வாலியை நிச்சயமாகக் கொல்வேன். லக்ஷ்மணா, அதோ அந்த அழகிய பூப் பூத்த கொடியைக் கொண்டு வா. சுக்ரீவன் கழுத்தில் அதை மாலையாய் அமைத்துக் கட்டுவாய். யுத்தத்தில் யார் வாலி, யார் நம்முடைய நண்பன் என்று அதனால் நான் நன்றாகக் காண்பேன். நாம் எண்ணின காரியத்தை நிறைவேற்றுவோம். இன்றே வாலி பூமியில் விழுந்து புரள்வதைப் பார்ப்பாய், சுக்ரீவனே!'' என்றான்.

சுக்ரீவன் சமாதானமடைந்து மறுபடியும் உற்சாக மடைந்தான். லக்ஷ்மணன் பூங்கொடியைச் சுக்ரீவன் கழுத்தில் மாலையாக அமைத்துக் கோத்தான். மாலையை அணிந்த சுக்ரீவன் முன்னைவிட அழகாகத் தோன்றினான். உடனே கிஷ்கிந்தை வாயிலுக்கு மறுபடியும் போனான். கூடவே ராம லக்ஷ்மணரும் பின்னால் சென்றார்கள். (தொடரும்)

அழகான இரண்டு பக்கச் சிறுகதை இரண்டு மணி நேர நாடகமாக நீண்டிருக்கிறது. அப்படி நீட்டியபோது பொருத்தமான சம்பவக் கோவைகளைச் சேர்த்திருந்தால் நாடகம் விறுவிறுப்பாக இருந்திருக்கும். கூறின கூறல் என்ற பிழை தவிர்க்கப்பட்டிருக்கும். சம்பவங்களைச் சேர்க்கத் தடையாக இருப்பது ஒரே செட் மோகம். ஆனால் போடப்பட்டிருக்கும் ஒரே செட் பிரமாதம்.

மேஜர் சுந்தரராஜன் கொண்டுவரும் ரோஜாப்பூவும் மாலையும் காகிதமோ பிளாஸ்






டிக்கோ இரண்டில் ஒன்று. ஆனால் நாடகம் மணம் வீசாமல் போகவில்லை. பண்பட்ட நடிப்பு மேஜரிடம் மிளிர்கிறது. காதலை வெளியிடக் கூச்சப்படும் — படிப்படியாகத் தெம்பு பெறும் — கதாநாயகனாக அற்புதமாக நடிக்கிறார். கடைசிவரை பலவித உணர்ச்சி பாவங்களை அவர் கதைப் போக்குக்கு ஏற்ப அனாயாசமாகக் கையாள்கிறார்.

அசோக் ஜானகியைத் திருமணம் செய்து கொள்ள நிச்சயித்திருக்கிறான். அசோக் மீது வஞ்சம் தீர்த்துக்கொள்ளக் காத்திருக்கும் கயவன் ஒருவன் ஜானகியைத் திருமணத்துக்கு முன்பாகக் கற்பழித்து விடுகிறான். ஜானகி அவமானம் தாங்காமல் ஓடிப் போகிறாள். அவள் நினைவாகவே உருகும் அசோக், போதை அளிக்கும் மருந்துகளுக்கு அடிமையாகிச் சீரழிகிறான். பின்னால் ஜானகியின் குழந்தைக்காகத் தனது சொத்து சுதந்திரம் அனைத்தையும் இழக்கும் அசோக், பிறகு அக்குழந்தையையும் இழந்து இறுதியில் தன்னையே அழித்துக்கொள்கிறான்.

இப்படி ஒரு கனமான கதையை அரங்கேற்ற முற்பட்ட துணிச்சலைப் பாராட்ட வேண்டியதுதான்.

திருமண முகூர்த்தத்தைத் தவறவிடாமல் அசோக் ஜானகியின் படத்துக்குத் தாலி கட்டுவது உணர்ச்சி மயமான கட்டம். அசோக்கிடம் வேலைக்கு வந்து, அவன் தங்கையை மணம்புரிந்துகொண்ட பிறகு அசோக்கையே எதிர்த்துக்கொள்கிறான் வாசு. கதையில் இது நல்ல திருப்பம்.

தமிழ்க் கதைகளிலும் நாவல்களிலும் நாடகங்களிலும் ஆங்கிலச் சொற்றொடர்களைப் பயன்படுத்தும் மோகம் நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது. ரோஜாப்பூ அதற்கு விதிவிலக்கு அல்ல. அர்த்தம் தெரிந்துதான் இந்த வசனத்தைப் போட்டிருக்கிறேன் என்று சொல்லிக் கொள்ளவோ அல்லது ரசிகர்களுக்குப் புரியாமல் போய்விடுமோ என்று கவலைப்பட்டோ ஒவ்வொரு தடவையும் ஒரு கதாபாத்திரம் ஆங்கிலத்தில் பேசும்போதும் கூடவே தமிழ் மொழிபெயர்ப்பையும் தருகிறார் நாடகாசிரியர். திஸ் இஸ் மோஸ்ட் அன்னேச்சுரல் — அதாவது இது கொஞ்சம்கூட இயல்பாக அமையவில்லை ! - பொறுமையைச் சோதிக்கிறது.

கதாபாத்திரங்கள் தங்களுக்குத் தாங்களே பேசிக்கொள்வதென்பது பழங்காலப் பாணி — தவிர்த்திருக்கலாம். கற்பிழந்து விலைமாதாகி விட்ட ஜானகி, அசோக்கைத் தேடிவரும் காட்சி அனாவசியம். ரசிகர்கள் மனம் நெகிழ்வதற்குப் பதில் கேலிக்கிடமாகிறது இந்தக் காட்சி (படம்). மகனிடம் அனுப்பும் கடிதத்திலேயே அவள் தன் நிலையைச் சுருக்கமாகக் கூறி நாடகத்திலிருந்து விடைபெறலாம்.

நாடகாசிரியர் சுந்தரம் கல்கியின் 'கள்வனின் காதலி'யிலிருந்து ஒரு வசனத்தை எடுத்துப் போட்டிருக்கிறார்; டேல் ஆஃப் டூ ஸிடீஸ் என்ற உலகம் போற்றும் நாவலைப் பற்றி நாடகத்தில் அடிக்கடி கூறுகிறார். இந்த நாடகக் கதைக்கும் அந்த நாவல்களுக்கும் ஸ்நானப் பிராப்திகூடக் கிடையாது. சம்பந்தமில்லாமல் எதையாவது நுழைப்பானேன்?

ராஜகோபால சாஸ்திரியாக வி. ராஜகோபால் தோன்றிச் சக்கைப்போடு போடுகிறார். சபா மண்டபம் அதிர்கிறது சிரிப்பொலியில். அளவோடு நிற்கிறது ஹாஸ்யம். அதனாலேயே சிறக்கிறது.

வேலைக்கார வேலய்யன் பாத்திரத்தினை ஜானகிராமன் ஏற்றுக் கச்சிதமாக நடிக்கிறார். வாணியும் புஷ்பா ராணியும் தங்கள் பங்கைப் பொறுப்புடன் நிறைவேற்றுகின்றனர்.

முட்கள் குத்தினாலும் ரோஜாப்பூவின் குணமும் மணமும் எங்கும் போய்விடவில்லை.

ஏராளமான ஆங்கிலச் சொற்றொடர்களைப் போடும் நாடகாசிரியர் சுந்தரத்துக்கு இந்த ஓர் ஆங்கிலச் சொற்றொடரும் தெரிந்திருக்கவேண்டியது அவசியம்:

**When a character begins to explain itself instead of expressing itself drama dies.**

# சொத்தை பல்லென்ற பேச்சுக்கே இடமில்லை— வலி இல்லை





Binaca Fluoride toothpaste

## பினாகா புளோரைட் உபயோகியுங்கள்.

அது பற்சிதைவினால் வரும் நோவுகளையும், சொத்தைப் பல்வலியையும் தடுக்கிறது.
பற்களை வலுப்படுத்தி, ஆரோக்கியமுடன் இருக்கச் செய்கின்றன.
பற்களின் அகாலப் பருவ எனாமல் இழப்பை தானாகவே சீர்செய்து, நிறைவுபடுத்துகிறது.

இந்தியாவிலுள்ள புளோரைட் பற்பசைகளில், சோடியம்-மோனோ-புளோரோ-பாஸ்பேட் (SMFP) கொண்ட ஒரே பற்பசை பினாகா புளோரைட்—எனவே:-

- ஊறுசெய்யும் வாய் அமிலங்கள் ஊறுவதை தடுக்கிறது
- பற்களின் எனாமலைப் பலப்படுத்துகிறது
- பற்களில் சொத்தை விழாமல் பாதுகாக்கிறது



பற்களின் சிதைவு, வலி தரும்
சொத்தை—இவைகளுக்கெதிரான மும்முனைப்
பாதுகாப்பு பினாகா புளோரைட்

CIBA Cosmetic



# ரகுபதி ராகவ

## மகாத்மா காந்தி

தமிழாக்கம் — ராஜாஜி

37 (I)

பிற மதங்களைப் பற்றி நாம் நடந்து கொள்ள வேண்டிய முறையை எடுத்துச் சொல்லுகிறவர்கள், 'சகிப்புத் தன்மை' இருக்க வேண்டும் என்று சொல்லுவார்கள். 'சகிப்பு' என்கிற சொல் எனக்குப் பிடிக்கவில்லை. ஆனால் அதைவிட நல்ல சொல்லும் நான் காண முடியவில்லை.

'பிற சமயங்கள் நம்முடைய சொந்த மதாசாரத்தைவிடக் குறைந்தனவாகக் கருதி, ஆனாலும் அவற்றைப் பொறுத்துக் கொள்ள வேண்டும், வெறுக்கக் கூடாது' என்பது ''சகித்தல்'' என்ற சொல்லுக்குப் பொருள். பிற சமயங்கள் தவறான சமயங்கள் என்று எண்ணுவதே குற்றம். அந்தக் குற்றமான எண்ணத்துடன் கலந்த சகிப்புத் தன்மை உதவாது. நம்முடைய சமயாசாரங்களைப் போலவே பிறருடைய சமயாசாரங்களைக் கௌரவிக்க வேண்டும் என்பது அஹிம்ஸா முறையின் தர்மம்.

நம்முடைய சமயம், நம்முடைய ஆசாரம் என்று சொல்லுகிறோமே அவற்றிலும் குறைகள் உண்டு என்பதை உணர்ந்து பிறருடைய சமயாசாரங்களில் குற்றங்களைக் கண்டாலும் அந்தச் சமயாசாரங்களைப் பற்றிக் கௌரவமாக நடந்து கொள்ள வேண்டும். அன்பு நெறியில் உண்மையை நாடுபவனுக்கு இது கஷ்டமாக இராது. எளிதே ஆகும். உண்மையின் முழு தரிசனம் நாம் பெறவில்லை. பெற்று விட்டால் நாம் ஆண்டவனுடன் ஒன்றுபட்டு விட்டவர்களாவோம். அதன் மேல் தேடும் வேலை என்ன, நாடும் வேலை என்ன? சத்தியமும் கடவுளும் ஒன்றேயல்லவா! உண்மையை உணர்ந்து விட்டேன் என்று ஒருவன் சொல்லிக் கொண்டால் நான் முக்தியடைந்து விட்டேன் என்று சொல்லுவது போலாகும். நாம் ஜீவன்முக்தர்களல்ல. பக்தர்கள். ஆண்டவனுடைய பாத கமலங்களை அடைய முயற்சி செய்கின்றோம். நம்முடைய ஞானத்திலும் பக்தியிலும் உள்ள குறைகளை உணர்ந்தே அவன் அடிகளை நாடுகிறோம். குற்றம் குறைகள் நிறைந்த நாம் எப்படிக் குறையற்ற முறையில் சமய உண்மையை உணர்ந்துவிட முடியும்? பாத்திரத்தின் அழுக்கு அதில் தங்கும் ஜலத்தையும் கெடுக்கும் அல்லவா? கடவுளின் தரிசனமும் பெறவில்லை; தர்மத்தையும் பூரணமாகக் கண்டுவிட்டவர்கள் அல்ல. அப்படியிருக்க, 'நான் கண்ட சமயமே சரி' என்று பிடிவாதம் செய்வது தவறாகும். நாம் அறிந்த சமய உண்மைகளைத் திரும்பத் திரும்பத் திருத்திக் கொள்ள வேண்டியதாகும். கண்டு விட்டேன் என்று அகம்பாவம் கொள்வதற்கில்லை. உண்மையை மெள்ள மெள்ளத்தான் அணுக முடியும்.

ஆனபடியால் இந்தச் சமயம் உயர்ந்தது; அந்தச் சமயம் தாழ்ந்தது என்று பேசுவதற்கு இடமில்லை. எல்லாச் சமயங்களிலுமே மெய்ப்பொருளின் தரிசனம் ஓரளவு பெறலாம். எல்லாவற்றிலுமே குறையும் குற்றமும் உண்டு. சமயங்களைப் பக்தியோடு பின்பற்றலாம். கௌரவமும் அளித்து வரலாம். ஆனால் குறைகள் இல்லை என்று கண்ணை மூடிக் கொள்ள வேண்டியதில்லை. நாம் அனுசரித்து வரும் சமயத்திலும் குறைகளைக் காணலாம். அதற்காக அதை விட்டுவிட வேண்டியதில்லை. நம்முடைய அறிவைச் சீர்ப்படுத்திக் கொண்டு வெற்றி பெறலாம். எல்லாச் சமயங்களையும் கௌரவித்து அந்தச் சமயங்களிலுள்ள நல்ல அம்சங்களை நாமும் எடுத்துக் கொள்ளலாம். அவற்றை நம்முடைய சமயத்திலேயே கூட்டிக் கொள்ளலாம். அப்படிச் செய்வதே கடமையாகும்.



# பிரிட்டனுக்கு ஒரு பிரம்மச்சாரிப் பிரதமர்

**வா**க்காளர்களைத் தேர்தல் சமயத்தில் நேரில் சந்திப்பதென்றால் இவருக்கு மிக்க சங்கோசம்! ஆனால், இந்தத் தடவை திரு ஜார்ஜ் ஹீத் அப்படி ஒதுங்கி யிருக்கவில்லை. வாக்காளர் கூட்டங்களில் கூச்சமின்றிப் புகுந்து புறப்பட்டார்; பேசினார்; சிரித்தார்; கை குலுக்கினார்; குழந்தைகளைக் கொஞ்சி முத்தமிட்டார்; வென்றார்!

போட்டியிட்ட 1798 பேர்களில் தொழிற் கட்சியினர் 617; கன்சர்வேடிவ் அல்லது டோரி கட்சியினர் 628, லிபரல் கட்சியினர் 333, கம்யூனிஸ்ட் 58. டோரி கட்சி எதிர் பார்த்ததை விடக் கணிசமான வெற்றி பெற்று அதன் தலைவர் மகாகனம் எட்வர்ட் ரிச்சர்ட் ஜார்ஜ் ஹீத் பிரிட்டனின் பிரதம ராகி விட்டார். இத்தேர்தலில் குறிப்பிடத் தக்கது போட்டியிட்ட 58 கம்யூனிஸ்டுகளும் தோல்வியடைந்தது மட்டுமின்றி, அவ்வளவு பேரும் ஜாமீன் தொகையை இழந்தனர்.

54 வயதான பிரதமர் ஹீத் 1950 முதல் பிரிட்டிஷ் பாராளுமன்ற உறுப்பினராக (கன்சர்வேடிவ் கட்சி) இருந்து வருகிறார். நடுத்தரக் குடும்பத்தில் பிறந்த இவர் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் உபகாரச் சம்பளத்தில் பயின்று பட்டம் பெற்றார். முக்கிய பாடங்கள்: தத்துவம், அரசியல், பொருளாதாரம். இறுதி ஆண்டு வகுப்பில் பயிலுகையில் மாணவர் சங்கத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். விவாத மன்றத் தலைவராகவும் திகழ்ந்த திரு ஹீத் அமெரிக்கப் பல்கலைக் கழகங்களில் விவாத அரங்குகளில் கலந்து கொள்ளும் வாய்ப்பினையும் பெற்றார். ஆக்ஸ்போர்டில் பயிலும்போதே இவருக்குச் சர்வாதிகாரிகளைக் கண்டால் அறவே பிடிக்காது. ஐரோப்பிய நாடுகளின் சர்வாதிகாரிகளைத் துணிந்து கண்டனம் செய்வார். இதைக் கேட்டுக் கொண்டிருந்த ஒரு மாணவர், 'இவர் ஒரு நாள் பிரதமர் ஆவார்!' என்று அன்றே கூறினாராம். அவர் சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன்பு கூறியது வீண் போகவில்லை!

அரசியலில் இவருக்கிருந்த தீவிர ஆர்வம் காரணமாக, படிப்பு முடிந்தவுடன் இரண்டாவது உலகப் போர் மூளும் தறுவாயில் ஐரோப்பிய நாடுகளைச் சுற்றிப் பார்க்கத் துணிந்தார். போலந்து, டான்ஸிக் முதலிய இடங்களுக்கு விஜயம் செய்து விட்டு வட மேற்கு ஐரோப்பா வழியாகத் திரும்பி ஊர் வந்து சேர்ந்தார். போர் மூண்டதும் 1940ல் இராணுவத்தில் சேர்ந்த இவர், போர் முடிவடைந்த பிறகும் தொடர்ந்து பல ஆண்டுகள் இராணுவ சேவையில் ஈடுபட்டிருந்தார். பின்னர் சிறிது காலம் சிவில் சர்வீஸில் பணியாற்றி ராஜிநாமா செய்துவிட்டுப் பத்திரிகைத் தொழிலிலும், பாங்கிலும் வேலை பார்த்த பிறகு அரசியலில் தீவிரமாக ஈடுபட்டார். திரு ஹீத் 1950ல் பெக்ஸ்லி தொகுதியில் கன்சர்வேடிவ் கட்சி அபேட்சகராக நின்று தேர்தலில் வெற்றி பெற்றுப் பாராளுமன்ற உறுப்பினரானார்.

கன்சர்வேடிவ்கள் ஆட்சியில் இவர் மந்திரியாக விளங்கியதுடன் ஐரோப்பிய பொதுச்

ஹீத்துடன் ஜனாதிபதி நிக்ஸன்



சந்தையில் பிரிட்டன் சேரவேண்டும் என்று வற்புறுத்தி பிரிட்டனின் சார்பில் பேச்சு வார்த்தைகள் நடத்தியிருக்கிறார்.

தொழிற் கட்சியினர் ஆளுகையில் எதிர்க் கட்சித் தலைவராக (1965 முதல்) பணி யாற்றினார் ஹீத். 1966ல் நடைபெற்ற பிரிட்டிஷ் பொதுத் தேர்தலில் கன்சர்வேடிவ் கட்சி படுதோல்வியுற்றபொழுது திரு ஜார்ஜ் ஹீத் அதன் தலைவராக இருந்தார். அவரது தலைமையிலேயே இன்று கன்சர்வேடிவ் கட்சி அமோக வெற்றி பெற்று மீண்டும் மந்திரி சபை அமைக்கும் வாய்ப்பினைப் பெற்று விட்டது.

ஹீத்துக்கு இசையில் தீவிர ஈடுபாடு உண்டு. கல்லூரி நாட்களிலேயே இசைக் கருவிகளைத் திறமையோடு கையாண்டு பழகிய திரு ஹீத் பியானோ வாசிப்பதில் நிபுணர்.

இசையில் இவருக்கு எத்தனை ஆர்வம் உண்டோ அவ்வளவுக்கு மதத்திலும் ஈடுபாடு உண்டு. புகை பிடிக்கும் வழக்கம் இல்லாதவர். படகோட்டுவதில் நல்ல திறமையுள்ளவர் திரு ஹீத். ஆஸ்திரேலியாவில் 1969ல் நிகழ்ந்த சில படகுப் போட்டிகளில் கலந்து கொண்டு வெற்றி பெற்றுள்ளார்.

ஜியார்ஜ் பால்ஃபோர் (1902-1906) அவர்களுக்குப் பிறகு பிரிட்டனுக்கு இன்று மீண்டும் ஒரு பிரம்மச்சாரிப் பிரதமர் வாய்த்துள்ளார். திரு ஹீத்திடம் திருமணம் செய்து கொள்ளுமாறு யாராவது யோசனை கூறினால் இவர் அளிக்கும் பதில்: "பிரதமர் பதவியில் மேலும் சிறக்க வேண்டும் என்பதற்காக ஒருவர் திருமணம் செய்து கொண்டால், அவர் நல்ல பிரதமராகவும் இருக்க முடியாது; நல்ல கணவராகவும் பெயரெடுக்க முடியாது!"

—ரா. பா.

பிடிக்கிறதோ இல்லையோ,
பிரிட்டிஷ் பிரதமர்
இதில்தான்
வசித்தாக வேண்டும்!

# நம்பர் 10-டௌனிங் தெரு

இந்தத் தெருப் பெயரையுடைய டௌனிங், ஆலிவர் கிராம்வெல் காலத்தில் ஓர் ஒற்றனாக இருந்தவன்.

எவ்வளவுக்கெவ்வளவு இந்த இல்லம் பெயர் பெற்றதோ அவ்வளவுக்கவ்வளவு இக்கட்டிடம் குறை கூறுவதற்கும் இடமளித்திருக்கிறது. இதில் வசித்த பிரிட்டிஷ் பிரதம மந்திரிகள், அவர்களின் மனைவிமார்கள் ஆகியோரில் பெரும்பாலோர் இந்தக் கட்டடத்தைக் குறை கூறி யிருக்கின்றனர். இந்தக் கட்டிடத்தில் 60 அறைகளும் பல ஹால்களும் உள்ளன. ஜார்ஜ் டௌனிங் என்ற கிராம்வெல் காலத்து ஒற்றன் அரசனின் தயவைப் பெற்றும் பெரும் பணக்காரனாகி இந்தக் கட்டிடத்தை 1681ல் கட்டினான்.

பின்னர் இக்கட்டிடம் அரசாங்க உடைமையாகி விட்டது. இரண்டாவது ஜார்ஜ் மன்னர் இதை வால்போல் என்கிற தம் மந்திரிக்கு வசிக்கக் கொடுத்து விட்டார். அன்று முதல் இந்த இல்லம் பிரிட்டிஷ் பிரதம மந்திரியின் வாசஸ்தலமாக இருந்து வருகிறது.

"இந்த விட்டில் எனக்கு வழி தட்டுக்கெட்டு விடுகிறது" என்று அடிக்கடி ஆஸ்குவித் (1908) தின் மனைவி குறை கூறுவதுண்டு.

லார்ட் நார்த்துக்கு இந்த இடம் பிடித்திருந்தது. ஆனால் அவர் மனைவிக்குப் பிடிக்கவில்லை. இதனாலேயே இவர்கள் இருவருக்கும் அடிக்கடி மனஸ்தாபம் ஏற்பட்டதுண்டு.

கிளாட்ஸ்டனுக்கு இந்த இடம் சிறிதுகூடப் பிடிக்கவில்லை. அரசாங்கம் ரொம்ப வற்புறுத்தியதன் பேரில் அவர் இதற்கு அடுத்த கட்டிடமான நெ. 11 டௌனிங் தெருவில் குடியேற இசைந்தார். இரண்டாவது தரம் பிரதம மந்திரியானபோது, நெ. 10 கட்டிடத்தில் குடியேறச் சம்மதித்து அங்கு வசித்தார். அப்போதுதான் நெ. 11 கட்டிடம் பிரதமரின் காரியாலயமாக மாற்றியமைக்கப்பட்டது.

மாக்மில்லனின் மனைவி டோரதி தன் 12 குழந்தைகளுக்கு இந்த இடம் போதவே போதாது என்று குறைப்பட்டுக் கொண்டாள். சேம்பர்லெயின் மனைவி நெவில்லி மிகப் பிரயாசை எடுத்துக்கொண்டு சமையலறையை 15000 பவுனில் செப்பனிட ஏற்பாடு செய்தாள். ஆட்லியும் அவர் மனைவியும் இக்கட்டிடத்தில் ஒரு சிறு பகுதியை மட்டுமே உபயோகித்தனர்.

நெ. 10 கட்டிடத்தில் போலீஸ் காவல்] தவிர தானியங்கு முறையில் பாதுகாப்பு ஏற்பாடுகளும் உண்டு. வாசலைக் கடந்து கால்வைத்தால் எச்சரிக்கை மணி ஒலிக்கும். இம்மாதிரி காவல்களை யெல்லாம் தாண்டி ஒருவன் சில வாரங்களுக்கு முன் இக்கட்டிடத்துக்குள் நுழைந்து விட்டான். ஒரு சோபாவில் இவன் ஆனந்தமாகத் தூங்கிக்கொண்டிருந்தான்! ஆனால் அங்கு வசிக்கும் பிரதமர்களுக்கு மன அமைதியுடன் தூக்கம் வருமா? - நஜன்

பிரிட்டனின் பிரதம மந்திரி இல்லம்









எக்ஸ்போ 70ல் சில காட்சிகள்.

1. நடுவே ஜப்பானிய பாணியில் ஃபூருகாவா அரங்கம். அதற்கு முன்புறம் மூன்று தனித்தனி கட்டிடங்களாகத் தாய்லாந்து நாட்டு அரங்கம். பின்னால் உருண்டையாகத் தெரிவது உலகிலேயே மிகச் சிறிய நாடான அபுதாபியின் அரங்கம்.

2. அமெரிக்க அரங்கத்தின் கூரை. பூமி மட்டத்துக்குக் கீழே உள்ளது விசாலமான கண்காட்சி.



வலது பக்கம் :

3. பர்மிய அரங்கத்தின் ஒரு தோற்றம்.

4. வெள்ளைப் புலி இருக்குள்ளேதான் இருக்கிறது-இந்திய அரங்கு.

5. விநோதமான திரைப் படங்களைக் காட்டும் நூதனமான அரங்கம். — அஸ்ட்ரோராமா, ஸான்வா பாங்கும் மற்றும் 31 ஜப்பானிய நிறுவனங்களும் சேர்ந்து இதை அமைத்துள்ளன.

# ஓஸாகாவில் உலகத் திருவிழா

**815** ஏக்கர் நிலப்பரப்பில் 77 உலக நாடுகள் அரும்பாடு பட்டு அமைத்த பிரும்மாண்டமான எக்ஸ்போ 70 கண்காட்சி உழைப்புக்குப் பெயர்போன ஜப்பானியர்களின் நிர்வாகத் திறமைக்குச் சான்று.

அமெரிக்கா, சோவியத் ரஷ்யா போன்ற பெரிய நாடுகளிலிருந்து, உலகிலே மிகச் சிறிய அபுதாபி (அரேபியா அருகி லுள்ளது) என்ற நாடுவரை பல்வேறு நாடுகளும் அமைத்துள்ள அரங்குகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதம்! வானை முட்டும் கட்டடங்களுக்குப் பெயர்போன அமெரிக்கா இங்கு அமைத்துள்ள அரங்கம், மற்ற எல்லா அரங்குகளையும்விட உயரத்தில் குறைவு. (41 அடி) காரணம் இவ்வரங்கின் பெரும் பகுதி பூமிக்கு அடியில் அமைக்கப்பட்டிருக்கிறது. மிகவும் உயரமானது சோவியத் அரங்கு (325 அடி.)

''பார்வையாளர்கள்'தம் சொந்த மோட்டார் வண்டிகளை எக்ஸ்போ அரங்கிற்குள் ஓட்டிச் செல்ல முடியாது. தரை மட்டத்திலிருந்து சற்று உயரமாக அமைந்துள்ள நடைபாதையில் ஏறி நின்றால் அந்த நடைபாதையே நம்மை இழுத்துக் கொண்டு நகரும். 'ஏர்கண்டிஷன்' செய்யப்பட்ட குழாய்களின் ஊடே நகர்ந்து செல்கிறது நடைபாதை. பிளாஸ்டிக் அல்லது கண்ணாடி போன்ற இக் குழாய்களின் வழியே பார்த்

தால் வெளிப்புறக் காட்சிகளை ரசிக்கலாம். கட்டணம் ஏதுமில்லை! மின் விசையால் இயங்கும் கார்கள் வாடகைக்குக் கிடைக்கின்றன. மேலும் 'மானோ ரயில்' எக்ஸ்போ முழுவதும் ஓடிக் கொண்டிருக்கிறது. மின் விசையால் ஓடும் 'பஸ்'களும் ஏராளமாக உள்ளன. இஷ்டம்போல் சுற்றிப் பார்க்கலாம். மார்ச் 15ம் தேதி தொடங்கிய இக் காட்சிக்கு 19ம் தேதி, அதாவது 5 நாட்களுள், 10 மிலியனுக்கு மேற்பட்டவர்கள் விஜயம் செய்து விட்டார்கள் என்றால் பாருங்களேன்!'' என்றார் 'எக்ஸ்போ' காட்சியைக் கண்டு மகிழ்ந்து திரும்பிய திரு வி. பானு.

'பாருங்களேன்!' என்று லேசாகச் சொல்லி விட்டார் அவர். இந்திய காப்பி போர்டு (பெங்களூர்) இயக்குனர் என்ற முறையில் எக்ஸ்போ சென்று சில வாரங்கள் தங்கி இந்திய அரங்கிலுள்ள உணவு விடுதிகளின் மூலம் இந்திய காப்பியின் ருசியை உலக மக்களிடையே பரவச் செய்துவிட்டுத் திரும்பியுள்ளார் திரு பானு. விஸா, பாஸ்போர்ட் எல்லாம் அடித்துப் பிடித்து நாம் வாங்கி விட்டாலும் ஜப்பானுக்குப் போய் வருவதற்கான செலவு என்ன கொஞ்சமா? சென்று வந்தவரின் அனுபவங்களைத்தான் செலவின்றிப் பகிர்ந்து கொள்வோமே?

அமெரிக்கா, மேற்கு ஜெர்மனிக்கு அடுத்தபடியாகத் தொழில் விஞ்ஞானத் துறைகளில் முன்னேற்ற மடைந்துள்ள ஜப்பான் சில ஆண்டுகளில் உலகில் இரண்டாவது இடத்தைப் பெறும் குறிக்கோளுடன் உழைத்து வருகின்றது.





''ஒரு தொழிற்சாலையில் வேலை நிறுத்தம் நடந்து கொண்டிருந்தது. 'வேலை நிறுத்தம்' என்றால் இங்கு வேலை தடைப்படுவதில்லை! நாட்டின் உற்பத்தி குறைந்தால் அது ஒவ்வொரு தொழிலாளிக்கும் இழுக்கு என்று எண்ணுகின்றனர் ஜப்பானியர். வேலை நிறுத்தத்தின்போது தொழிலாளர் முழங்கைக்குமேல் சட்டையில், வேலை நிறுத்தத்தின் அடையாளமாக 'பாட்ஜ்' அணிந்தவாறு பணியாற்றுகின்றனர். 'ஸ்ட்ரைக்' தீவிரமடையும்போது 'ஓவர்டைம்' செய்து அதிக உழைப்பைத் தருகிறார்கள். இந்த அதிகப்படி (ஓவர்டைம்) வேலைக்கு அவர்கள் சம்பளம் வாங்க மறுத்து விடுகிறார்கள்! முதலாளிகள் மனம் மாறித் தங்கள் கோரிக்கைக்குச் செவி சாய்க்கும் வரை இந்த விசித்திரமான 'வேலை நிறுத்தம்' நீடிக்கிறது. நாட்டின் உற்பத்திப் பெருக்கத்துக்கு எவ்விதத்திலும் குந்தகம்








''மிஸ்டர் கணேஷ்! நீங்கள் அரசியலில் புகுந்திருந்தால் பெரிய தலைவராகி விருப்பீர்கள்!''

''நிஜமாகவா?''

''ஆமாம். ஒரு நாள் தவறாமல் ஆபீசுக்கு லேட்டாக வருகிறீர்களே, அதுவே போதும்!''

விளையக் கூடாது என்பதே ஜப்பானியர்களின் ஒரே லட்சியம்'' என்கிறார் திரு பாலு.

''ஜப்பானியரின் பண்பாட்டுக்கு மற்றோர் உதாரணம் பாருங்கள்!'' என்று தமது அனுபவத்தைக் குறிப்பிடுகிறார் திரு பாலு. ''ஒரு நாள் டாக்ஸியில் போய்க் கொண்டிருந்தேன். நான் செல்லவேண்டிய முகவரியை டாக்ஸி ஓட்டுபவரிடம் முன்னதாகவே எழுதிக் கொடுத்து விட்டேன். டிரைவர் தாம் ஏதோ தவறு செய்து விட்டதுபோல முகத்தைச் சுளித்தார். குறிப்பிட்ட இடத்தை அடைந்ததும் கீழே இறங்கி மீட்டர்படி 800 யென் (சுமார் 50 யென் - ரூ. 1.) கொடுத்தேன். 650 யென் கொடுத்தால் போதும் என்றார் டாக்ஸி டிரைவர். தாம் தவறான வழியில் வந்ததால் 150 யென் அதிகமாகி விட்டது; எனவே அந்த 150 யென் வேண்டாம் என்று பிடிவாதமாக மறுத்து மீட்டருக்குக் குறைவாகவே வாங்கிக் கொண்டு 'ஸையொனாரா' (குட் - பை) என்று கூறி விடை பெற்றார்!

''எக்ஸ்போ காட்சி சாலைக்குள்ளும் அவர்களின் இயல்பான மனிதாபிமானத்தைக் காண முடியும். மழை பெய்யும்போது நான் குடையில்லாமல் சென்றால் குடையுடன் செல்லும் சிறுவர்கள் என்னை வற்புறுத்திக் குடையின்கீழ் வருமாறு அழைத்து என் விடுதி வரை கொண்டு வந்து விட்ட சந்தர்ப்பங்களை என்னால் மறக்க இயலாது. ஒரு நாள் எக்ஸ்போ தபாலாபீசைத் தேடிச் சென்று கொண்டிருந்தேன். எதிரில் வந்த ஒரு பெண்ணிடம் விசாரித்தேன். நேர் எதிர்த் திசையில் சென்று கொண்டிருந்த அந்தப் பெண் என்னுடன் சுமார் அரை மைல் தூரம் நடந்து வந்து அஞ்சலகத்தைக் காண்பித்து விட்டுத் திரும்பிச் சென்றாள். அந்த அன்பும் பண்பாடும் அலாதிதான்!

''ஆனால் கண்டிப்புடன் நடந்து கொள்ள வேண்டிய சந்தர்ப்பங்களில் அவர்கள் சற்றும் விட்டுக் கொடுப்பதில்லை. ஒரு போலீஸ் சார்ஜெண்ட் குடிபோதையில் ஒரு காரைத் திருடி ஓட்டிச் செல்லும்போது இன்னொரு காரின்மீது மோதிவிட்டார். பல ஆண்டுகள் அவர் ஒரு சிறு தவறுகூட இழைக்காமல் பணியாற்றி வந்திருக்கிறார். எனினும், அவரை 'டிஸ்மிஸ்' செய்து விட்டதாக ஒரு ஜப்பானியப் பத்திரிகையில் படித்தேன். எங்கே கண்டிப்புத் தேவையோ அங்கே கருணை கூடாது என்பது அவர்களது கொள்கை போலும்'' என்கிறார் அன்பர் பாலு.

இனி அரங்குகளைச் சுற்றிப் பார்க்கலாமா?

பிரதான வாசலுக்குள் நுழைந்ததும் வானளாவ உயர்ந்து நிற்கும் சூரிய கோபுரத்தைக் காணலாம். உலகிற்கே உயிர்ச் சக்தியாக விளங்கும் கதிரவனுக்குக் கோபுரம் எழுப்பியவர் திரு டாரோ ஒகமோடோ. வானளாவ நிற்கும் ஒரு ஸ்தம்பம் கதிரவனின் சக்தியைக் கிரகித்து எலக்ட்ரானிக் இசை வழங்குகிறது.

மிகப் பெரிய அளவில் நான்கு பிளாஸ்டிக் மண்டபங்கள் — அது தான் பிரெஞ்சுக் காட்சி அரங்கு. விஞ்ஞானம், தொழில், யந்திர நுட்பம் ஆகிய பலவேறு துறைகளில் பிரான்ஸ் அடைந்துள்ள முன்னேற்றத்தைச் சித்திரிக்கும் இவ்வரங்கில் சிருங்கார ரசம் பற்றிய வாடையே இல்லை. சிருங்கார ரஸத்துக்குப் பெயர்போன நாடல்லவா அது? ''சிருங்கார ரசம் இல்லாமல் பாரிஸா! பிரான்ஸின் துணிச்சலே துணிச்சல்!'' என்று தமாஷாகக் குறிப்பிடுகிறது 'ஜப்பான் டைம்ஸ்' நாளிதழ்.

இந்த உலகப் பெருவிழாவில் குறிப்பிடத் தக்க ஒன்று, போப்பாண்டவரின் தலைமைப் பீடமான வாடிகன் இதில் பங்கு பற்றியுள்ளது. கிறிஸ்தவ மத சம்பந்தமான பல புராதனப் பொருள்கள் - நாலாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு விவிலிய வேத நூல் உள்பட, வாடிகனிலிருந்து காட்சிக்கு அனுப்பி வைக்கப் பட்டுள்ளன. வாடிகன் இம்மாதிரி காட்சிகளில் பங்கு பற்றுவது இதுவே முதல் தடவையாகும்.

ஜப்பானிய அரசாங்கமும் தொழில் வர்த்தக நிறுவனங்களும் அமைத்துள்ள காட்சிகள் பிரமிப்பூட்டுவன. மிட்ஸுபிஷி பெவிலியனுக்குள் நுழைந்து தானாகவே நகர்ந்து செல்லும் நடைபாதையின் மீது நின்றால் போதும்; கொந்தளிக்கும் கடலில் கடும் புயலும் பெருமழையும் வீசிப் பொழிவதையும் இடியையும் மின்னலையும் தத்ரூபமாகக் காணலாம். எல்லாம் செயற்கையானவை! ஜப்பான் வருங்காலத்தில் எப்படியிருக்கும் என்பதைக் கோடி காட்டும் ஒரு செயற்கை நகரம் பிளாஸ்டிக், கண்ணாடி, உலோகப் பொருட்களாலேயே நிருமாணிக்கப் பெற்றுள்ளது.

(அடுத்த இதழில் முடியும்)

# ஹெலிகாப்டர்கள் கீழே இறங்கிவிட்டன

இந்திரா பார்த்தசாரதி

2

**நா**டகக் கொட்டகைக்கு வெளியே இரண்டு மூன்று விமர்சகர்கள் நின்று கொண்டிருந்தார்கள். தென்னிந்தியக் கலை நிகழ்ச்சி எதுவாக இருந்தாலும், அதைப் பற்றி ஆங்கிலத்தினசரிகளில் அவர்கள்தாம் எழுதுவது வழக்கம். அவர்களில் ஒருவராகிய மணியை அமிர்தத்துக்குச் சுமாராகத்தெரியும்.

''என்ன புறப்பட்டுட்டீங்க?'' என்றார் அவர், வாயில் புகையிலையைக் குதப்பிக் கொண்டே.

''புறப்படலே... வீட்டிலே உள்ளே இருக்காங்க'' என்றான் அமிர்தம்.

''நாடகமே அவங்களுக்காகத் தானே?...'' என்றார் மணி சிரித்துக் கொண்டே.

''இதுதான் உங்க விமர்சனமா?'' என்று கேட்டான் அமிர்தம்.

''கரெக்ட்... வங்காளத்திலே புதுசு புதுசா 'தியேட்டர் குரூப்' ஏற்படறதுன்னு புதுசு புதுசா ஏதாவது செஞ்சு காட்டணும்ங்கிற நமைச்சல்னாலே.... ஆனா நம்மவங்க புதுசு புதுசா 'தியேட்டர் குரூப்' ஏற்படுத்தறது, பழைய குழுவிலே தனக்கு 'சான்ஸ்' கிடைக்கலேங்கிற காரணந்தான்... மத்தப்படி நாடகத்தைப் பொறுத்தவரையில் பழைய கதையேதான்... என்னிக்குத்தான் நமக்கு விடிவு காலமோ தெரியலே...''

''நம்முடைய கலாச்சார விஷயங்களுக்கெல்லாம் ரஸனையைப் பற்றிய மட்டும், பெண்கள்தான் அதிகாரிங்க என்கிறதை நாம் ஒப்புக் கொண்டிருக்கிறது இதுக்குக் காரணமாக இருக்கலாம்...'' என்றார் தடித்த ஃப்ரேம் போட்ட கண்ணாடி அணிந்த ஒருவர்.

''பெண்கள்னா, 'எஸ்டாபிளிஷ்ட் வேல்யூஸ்'லே ஒரு முரட்டுத்தனமான நம்பிக்கை வைச்சுக்கிட்டிருக்கிற அரைகுறைப் படிப்புள்ள பெண்கள்....'' என்றான் அமிர்தம்.

''நன்னா சொன்னீங்க... இன்னொரு விஷயம், இங்கிலீஷ் நாடகம்னா, நிர்த்தாட்சண்யமான கெஜக்கோல் வைச்சுண்டு அளக்கிற சோடா பாட்டில் கண்ணாடி ப்ரொஃபசர்ல்லாம், தமிழ் நாடகம்னா மனைவி குழந்தைகளை அழைச்சுண்டு வந்து, ஓர் அப்பாவித்தனமான ரஸனையோட விழுந்து விழுந்து சிரிக்கிறதுதான், சகிக்கலே..'' என்றார் மணி.

''ஆதரவு காட்டித் தட்டிக் கொடுப்பதாய் அவர்களுக்கு எண்ணம்!'' என்று சொல்லி விட்டு அமிர்தம் திரும்பிப் பார்த்தான்.



**நா**டகம் முடிந்து விட்டது. எல்லாரும் கொட்டகையை விட்டு வெளியே வந்து கொண்டிருந்தார்கள்.

''என்ன மணி ஸார், வெளியிலே நின்னுண்டிருக்கேளே?'' என்று கேட்டார் ஒருவர்.

''ஒரு பானைச் சோத்துக்கு ஒரு சோறு... இரண்டு 'ஸீன்' பார்த்தேன், அது போறுதா ?''

''நாடகம் எப்படி ?''

''ஃபஸ்ட் கிளாஸ்... காமன்வெல்த் டிராமா ஃபெஸ்டிவல்லுக்கு அனுப்பலாம்....''

''நிஜமா சொல்றேளா ?''

''நிஜமாத்தான் சொல்றேன்..... இப்போத்தான் இவாளோட பேசிண்டிருந்தேன். கேட்டுப் பாருங்கோ.... இந்த மாதிரி 'மாக்னம்–ஆபஸ்' எழுதினவங்களையெல்லாம் இந்தியாவிலே நாம சும்மா விட்டு வைச்சிருக்கக் கூடாது.''



கேள்வி கேட்டவர் பேசாமல் போய் விட்டார்.

''நீங்க 'மோதி பாக்' தானே போகணும்? உங்களை வீட்டிலே விட்டுட்டுப் போறேன்!...'' என்றான் அமிர்தம் மணியிடம்.

''நோ, தாங்க்ஸ்... நான் ஸ்கூட்டர்லே வந்திருக்கேன்'' என்றார் மணி.

''என்ன இப்படி நாடகத்தை முழுக்கப் பார்க்காமெ, எவ்வளவு நல்லா இருந்திச்சு....'' என்று சொல்லிக் கொண்டே வந்தாள் திலகம்.

''பார்த்தேளா? பெரும்பான்மையினருக்குச் சந்தோஷம் ஏற்படறதை நீங்களும் நானும் தடுக்க முடியுமா ? நான் வரேன்...'' என்று கூறிவிட்டுக் கிளம்பினார் மணி.

''தாகமா இருக்கு, எங்கேயாவது தண்ணி கிடைக்குமா ?'' என்று கேட்டாள் திலகம்.

''வா... அங்கே போய்க் கோக்கோ கோலா சாப்பிடலாம்.''

''என்ன, என்னை வைச்சுக்கிட்டு, அந்தப் பெண்ணைப் போய் 'ஸ்மார்ட்' அது, இதுங்கிறீங்க, பாலயம் திரும்பிடுச்சா?'' என்று

கேட்டாள் திலகம் கோலா வைப் பருகிக் கொண்டே.

''பால்யத்திலே சொன்னுத் தான் தப்பு... இப்போத்தான் வயசுங்கிற சலுகை இருக் குதே...'' என்ருன் அமிர்தம்.

''அந்தச் சலுகை வரத் துக்கு இன்னும் வயசாகல்லே. ஜாக்கிரதையா இருங்க..... நாப்பது வயசு இட்டினு நாய்க் குணம்பாங்க....''

இன்னும் ஐந்தாறு பேர் அங்கு கூடி யிருந்தார்கள். அவர்களில் மூன்று பேர் பெண்கள். திலகம் சொன்னது அவர்களுடைய காதில் தெளி வாக விழுந்திருக்க வேண்டும். ஏதோ பேசிக் கொண்டிருந்



தவர்கள் பேசுவதை நிறுத்தி விட்டுத் திலகம் நின்ற பக்கமாகத் திரும்பிப் பார்த்தார்கள். அமிர்தத்துக்கு அவமானமாக இருந்தது. காசை அவசரம் அவசரமாகக் 'கவுண்டரி'ல் வைத்து விட்டுக் கிளம்பினான்.

''நம்ம ஜனத்துக்கே மத்தவங்க என்ன பேசறாங்கன்னு ஒட்டுக் கேக்கறது தான் வேலை...'' என்றாள் அவனை வேகமாகப் பின்தொடர்ந்து வந்த திலகம்.

''நீ நாலு ஊர் கேக்கும்படியா கூச்சல் போடு, அவங்க காதைப் பொத்திப்பாங்க...'' என்றான் அமிர்தம் கோபத்துடன்.

''உங்களுக்கு ஏதாவது என்னைச் சொல்லிக்கிட்டே இருக்கணும். என்னோட வரத்துக்கு உங்களுக்கு விருப்பமில்லே, அதுக்காக ஏதாவது நீங்க சொல்லணும், அவ்வளவுதானே?''

அமிர்தம் விவாதத்தை இதற்குமேல் தொடர விரும்பவில்லை. திலகம் எந்த நிமிஷம் வெடிப்பாள் என்று சொல்ல முடியாது. அப்படியொரு நிலைமை ஏற்பட்டால், இந்த நாடகத்தைப் பார்க்கக் கூட்டம் கூடிவிடும்.

அவன் கார் அருகே சென்றபோது, நாடகத்தில் நடித்த அந்தப் பெண், இன்னும் இரண்டு மூன்று பேருடன் பாலு நின்று கொண்டிருந்தார்.

''ஹலோ, மிஸ்டர் அமிர்தம் வரார்...அவரைக் கேப்போம்...''என்று பாலு அவர்களிடம் சொல்லி விட்டு, அவனைப் பார்த்துப் புன்னகை செய்தார்.

## லேடீஸ் ஸ்பெஷல்!

''ஹலோ.... என்ன வேணும்?'' என்றான் அமிர்தம்.

''நீங்க கித்வாய் நகருக்குத் தானே போறேள்,... அப்படியே இந்தப் பெண்ணை லட்சுமிபாய் நகரிலே இறக்கிவிட முடியுமா? இவள் அவசரமாப் போகணும்... இவ அம்மாவுக்கு உடம்பு சரியில்லே, நாடகத்திலே நடிக்க ஒப்புக் கொண்டதுக்காக வந்திருக்கா,...... கொஞ்சம்.....''

அமிர்தம், பாலு அணிந்திருந்த 'பாட்ஜை'ப் பார்த்தான். ''நீங்களும் இந்தத் தியேட்டர் குரூப்போட சம்பந்தப்பட்டிருக்கீங்க போலிருக்கு.''

''நான்தான் வைஸ் பிரிஸிடென்ட்'' என்றார் பாலு, குரலில் பெருமை தொனிக்க.

''ஐ ஸீ.... சரி, அழைச்சுக்கிட்டுப் போறேன்....'' என்றான் அமிர்தம்.

''ஏறிக்கோம்மா...'' என்றார் பாலு பரிவுடன்.

அமிர்தம் காரின் பின் கதவைத் திறந்து விட்டான். அந்தப் பெண் ஏறி உட்கார்ந்தாள்.

திலகம் அமிர்தத்தின் பக்கத்தில் உட்கார்ந்தாள். அவள் மௌனம் அவனுக்குச் சற்றுச் சங்கடமாக இருந்தது. ஒருவேளை, தான் உடனே ஒப்புக் கொண்டது அவளுக்குப் பிடிக்கவில்லையோ?

''ரொம்ப நன்றி மிஸ்டர் அமிர்தம். வரேம்மா, பானு....''

பானு புன்னகையுடன் இலேசாகத் தலையை அசைத்தாள்.

திலகம் கார்க் கதவைப் படீரென்று சாத்தியது அமிர்தத்துக்கு என்னவோ போலிருந்தது.

''கொஞ்சம் மெதுவாகச் சாத்தியிருக்கலாம்....'' என்றான் அமிர்தம்.

அதற்கும் திலகம் பதில் சொல்லாமலிருந்தது அமிர்தத்துக்கு ஆச்சரியத்தைத் தந்தது.

கார் புறப்பட்டு 'கிரேட் ப்ளேஸை'த் தாண்டிச் செல்லும் வரையில் ஒருவரும்




ஆண்கள் ஏறும் பஸ்ஸை பஸ் என்றும் பெண்கள் ஏறும் பிரத்தியேகப் பஸ்ஸைச் சற்று அழகுபடுத்தி பஸ்ஸி என்று அழைக்கலாம்! அதற்கு விதம் விதமான வர்ணங்கள் பூசலாம்.

''ஏண்டி! இந்த ரூட்டில் மஞ்சள் நிற பஸ்ஸி ஓடறது தெரியாதோ? சகிக்க முடியாமல் மெஜந்தா கலர் புடவை கட்டிண்டு வந்திருக்கியே? மேட்ச் ஆக இருக்க வேண்டாமோ ?''





கண்டக்டர் :

''இது லேடீஸ் ஸ்பெஷல். நீங்க ஏற முடியாது.''

மாணவியர் :

? ? ? ? ?

பேசவில்லே. தொண்டையை இலேசாககனேத்துக் கொண்டு பானு கேட்டாள்: ''நாடகம் எப்படி இருந்தது, மாமி?''

''ஹூம்?.... நாடகமா?....நல்லா இருந்தது......''

''உங்களுக்குப் பிடிச்சிருந்ததா?''

''நாடகத்தை அவரு எங்கே பார்த்தாரு? ஏதோ கோவிச்சுக்கிட்டு உட்கார்ந்திருந்தாரு....'' என்ருள் திலகம்.

''அப்படியா ?''

''டிராமா 'ஹோப்லெஸ்', உன்... உங்க நடிப்பு நல்லா இருந்தது.''

'' பரவாயில்லே, 'உன்'னுன்னே, சொல்லுங்க....''

''ஏம்மா, 'மேக்—அப்'போடேயே புறப்பட்டுட்டியே, அவ்வளவு அவசரமா?'' என்று கேட்டாள் திலகம்.

''ஆமாம்.... அம்மா வீட்டிலே தனியா இருக்கா, உடம்பு சரியில்லே.''

''உங்கப்பா எங்கே வேலேயா இருக்காரு !''

''எனக்கு அப்பா கிடையாது. நீங்க சொன்னது உண்மைதான், நான் ஏதோ ஒப்புக் கொண்டதினுலே 'ஆக்ட்' பண்ணினேனே தவிர, 'டிராமா' ரொம்பச் சிறுபிள்ளேத்தனமானதுதான்!''

கெட்டிக்காரிதான் சந்தேகமில்லே. 'அப்பா கிடையாது' என்று சுருக்கமாகச் சொல்லிவிட்டு, பேச்சின் திசையை மாற்ற எவ்வளவு சாமர்த்தியமாக முயலுகிருள் ?

'' நாடகக் கதை 'ஹோப்ளஸ்'னு அவரு சொல்ருரு, நீயும் 'சைல்டிஷ்'ங்கிறியே, அப்பொ எதுக்காக நடிக்க ஒப்புத்துக்கிட்டே?'' என்று கேட்டாள் திலகம்.

''பிடிக்காத காரியம் எவ்வளவோ செய்யருேம், அதிலே இதுவும் ஒண்ணுன்னு வைச்சுக்குங்களேன்....''

''பிடிக்காத காரியம் எவ்வளவோன்னு என்ன அர்த்தம்?'' என்று கேட்டான் அமிர்தம்.

பானு சிறிது நேரம் பேசாமல் இருந்தாள். பிறகு சிரித்துக் கொண்டே சொன்னுள்: ''நான் ஒண்ணு இப்பொ கேட்கலாம், ஆனு....''

'' ஆனு...... என்ன ?'' என்ருன் அமிர்தம்.

''கோவிச்சுக்க மாட்டீங்களே?''

அவள் என்ன கேட்கப் போகிருள் என்று அவனுக்குப் புரியவில்லே. ஆனல் அவள் ஏதாவது சொல்லி, அதனல் திலகம் கோபம் கொள்ளப் போகிருளே என்று, அவன் பானுவை வற்புறுத்தி, ஒன்றும் கேட்கவில்லே. பேசாமல் இருந்தான்.

''கோவிச்சுக்கமாட்டாரு, சொல்லு'' என்று திலகம் அவளேத் தூண்டினுள்.

''நீங்களும் இந்த 'டிராமா'வை 'ஹோப்லெஸ்'னு சொன்னீங்க. இது உங்களுக்கு முன்னேயே தெரிஞ்ச விஷயந்தான்னு நினேக்கிறேன், அப்படியிருக்கச்சே, நீங்க எதுக்காக இந்த நாடகத்தைப் பார்க்க வந்தீங்க ?''

''நான் கூப்பிட்டேன், வந்தாரு'' என்ருள் திலகம். அவள் குரலில் உரிமையின் பெருமிதம் பொங்கியது.

அமிர்தம் கார் விளக்கைப் போட்டான். கண்ணுடி வழியே பார்த்தான். பானுவின் முகத்தில் குறுநகையின் கீறு. தன்னம்பிக்கையினுல் ஏற்பட்ட ஓர் அலட்சிய பாவத்தில் ஊறிய ஏளனப் புன்னகையின் சாயை.

திடீரென்று அவனுக்குத் தோன்றிற்று. நித்யாதான் பின் 'ஸீட்'டில் உட்கார்ந்து கொண்டு சிரிக்கிருளோ ? அவனுக்கும் நித்யாவுக்கும் ஒரு தடவை

பெண்கள் ஏறும் பஸ்ஸில் ஆண்களுக்குச் சில ஸீட்கள் ஒதுக்க வேண்டும் என்று வேலேயற்றவர்கள் வேலே நிறுத்தம் செய்யலாம் !





கண்டக்டர் : இது பெண்கள் பஸ்; ஏருதீங்க !

பெரியவர் : ஏனப்பா! தம் பதிகளுக்கென்று ஏதேனும் தனி பஸ் உண்டா?

பஸ்ஸில் ஒருவர் :

பிரயாணிகளெல்லாம் பின்னுலேயே தங்கிவிடுவார்கள். இப்பவெல்லாம் முன்னே போங்கோன்னு உடனே போயிடருங்களே ஏன் ?



ரஸனையைப் பற்றி ஒரு வாக்குவாதம் ஏற்பட்டது......

....செங்கோட்டை பக்கத்திலிருந்த ஒரு சின்னக் கடையில் உட்கார்ந்து கொண்டு 'சோலே' சாப்பிட வேண்டு மென்று பிடிவாதம் செய்தாள் நித்யா.

''அட, கடவுளே! இங்கேயா, என்ன ரஸனை உனக்கு?'' என்றான் அமிர்தம்.

''உங்களுக்கு ரஸனை இருக்கோ இல் லியோ, கற்பனை கிடையாது.... ரெட் ஃபோர்ட் பின்னணியில் இருக்கும் போது எவ்வளவு நன்னாயிருக்கும் தெரி யுமா இங்கே சாப்பிட்டா?''

''சரி! பேஷா நீ சாப்பிடு, நான் சாப்பிட மாட்டேன்.''

அமிர்தத்துக்கு அந்த நிகழ்ச்சி நினை வுக்கு வந்தது. நித்யா இப்பொழுது என்ன சொல்லுவாள்.... 'ரஸனை, ரஸனைன்னு உயிரை விடுவீங்களே, எவ் வளவு ரஸனையோட உங்க மனைவியைத் தேர்ந்தெடுத்திருக்கீங்க... ஐ ஆம் ஸாரி உங்க மனைவிதான் உங்களைத் தேர்ந் தெடுத்திருக்கா, அப்படித்தானே?...'

அமிர்தம் விளக்கை அணைத்தான்.

''என்ன விளக்கைப் போடறீங்க,, அணைக்கிறீங்க....?'' என்று கேட்டாள் திலகம்.

''எவ்வளவோ உபயோகமில்லாத காரியம் செய்யறோம். அதிலே இது ஒண்ணு....'' என்றான் அமிர்தம்.

பானு வாய் விட்டுச் சிரித்தாள். அவள் கொஞ்சம் தேவைக்கு அதிகமாகவே சிரித்தாள் என்று அவனுக்குப் பட்டது.

''நீங்க சொன்ன பதில்லே என்ன அப்படி வேடிக்கை இருக்குதுன்னு எனக் குப் புரியலியே....'' என்றாள் திலகம்.

''எனக்கும் புரியலே....'' என்றான் அமிர்தம்.

''மாமி வெளிப்படையாப் பேசறது எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு....'' என்றாள் பானு.

''அப்படின்னா நான் வெளிப்படை யாப் பேசல்லேன்னு அர்த்தமா?'' என் றான் அமிர்தம்.

''அதைப்பற்றி நிச்சயமான முடி வுக்கு என்னால் வர முடியலே.''

மறுபடியும் விளக்கைப் போட்டு அவளைத் திரும்பிப் பார்க்கலாமா என்று அமிர்தம் நினைத்தான். ஆனால் அவ் வாறு செய்யவில்லை. இந்த மாதிரி சந் தர்ப்பத்தில் நித்யாவும் பானுவைப் போல்தான் பதில் சொல்லியிருப்பாள்.

அப்பொழுது அவனுக்கு மற்றொரு விஷயம் ஞாபகத்துக்கு வந்தது. இந்தத் 'தியேட்டர் குரூப்'பைச் சேர்ந்த கேசவன் சில தினங்களுக்கு முன்னால் சொன்ன தகவல் இந்தப் பெண்ணைப் பற்றித்தான் இருக்க வேண்டும்....

''மெட்ராஸ்லேந்து புதுசா ஒரு பெண் வந்திருக்கு... என்னமா நடிக்கிறதுங் கிறே? அவளுடைய அம்மாவும் நடிக் கிறா... அம்மா எட்டடி பாய்ஞ்சா, பொண்ணு பதினாறு அடி பாயறா....''

அப்படியானால் நடிப்பில் தேர்ந்த தாய் ஏன் இன்று நாடகத்துக்கு வரவில்லை ?— உடம்பு சரியில்லே என்று சொன்னாளே, சே ! அதற்குள் மறந்து விட்டது !

''உங்கம்மாவும் நடிப்பது உண்டு, இல்லையா ?'' என்று கேட்டான் அமிர்தம்.

''ஆமாம்....உங்களுக்கு எப்படித் தெரி யும்? எங்கம்மாவும் இந்த நாடகத்திலே நடிக்கிறதா இருந்தது. ஆனா உடம்பு சரியில்லே...எங்கம்மாவும் நடிப்பான்னு யாரு சொன்னா ?''

''கேள்விப்பட்டேன்....''

''யார் சொன்னாங்க? நீங்க இதுவரை என்கிட்டே சொன்னதே இல்லையே!...'' - திலகம் கேட்டாள்.

அமிர்தம் பேசாமல் இருந்தான். கார் துக்ளக் வழியே போய்க் கொண்டிருந் தது. எதிர்த்தாற்போல் சைக்கிளில் வந்த ஒரு சிறுவன் கார் முன்னால், 'தொப்'பென்று விழுந்தான். திடீ ரென்று காரைப் பிரேக் போட்டு நிறுத் திய வேகத்தில் திலகம் அவன் மீது மோதிக் கொண்டாள்.

காரிலிருந்து கீழே இறங்கி அமிர்தம் மிரண்டு நின்ற அந்தப் பையனைத் தட்டிக் கொடுத்தான். நல்ல வேளை, சைக்கிளும் தப்பித்தது, சிறுவனுக்கும் அடியில்லை.....

''மாப் கரோஜி'' என்றான் பையன்.

''டீக் ஹை, சலோ....''

காரில் திரும்பி வந்து உட்கார்ந்து கொண்ட அமிர்தத்திடம் திலகம் சொன்னாள்: ''என்ன இது, அந்தப் பையனை இப்படித் தட்டிக் கொடுத் துட்டு வர்றீங்க, நல்லா அறையாமே!''

''ஏற்கனவே பயந்து கிடக்கிறான், அறையணுமா வேறே, பாவம்!''

''உங்களுக்கு மத்தவங்ககிட்டே இருக் கிற கரிசனம் என்கிட்டே"ஏன் இல்லே?''

திலகம் எதற்காக இதைக் குறிப்பிடு கிறாள்? பானுவை வீட்டில் கொண்டு விட ஒப்புக் கொண்டதற்காகவா?

''நான் கேட்ட கேள்விக்கு நீங்க இன்னும் பதில் சொல்லலியே?'' என் றாள் திலகம்.

''என்ன கேள்வி, ஏன் கரிசனம்னு?''

''அதுவுந்தான்... மத்தப்படி, இவ அம்மா நடிப்பாங்கன்னு யாரோ சொன்னதாச் சொன்னீங்களே, யார் சொன்னாங்க, ஏன் என்கிட்டே சொல்லலே?'' என்று கேட்டாள், திலகம். (தொடரும்)

சுதந்திரம் என்பது உங்களுக்கு வெகு மதியாகக் கொடுக்கப்பட்ட ஒரு விஷயம் அல்ல. சர்வாதிகார ஆட்சியிலும் நீங்கள் சுதந்திரமாக இருக்க முடியும். நீங்கள் அந்த சர்வாதிகாரத்துக்கு எதிராகப் போரா டினுல் போதும். யார் தன் மூளையை உப யோகித்துச் சிந்திக்கிருனே அவன் சுதந்திர மனிதன். யார் தான் உண்மை என்று நம்பும் விஷயத்துக்காகப் போராடுகிருனே அவன் சுதந்திர மனிதன். உலக நாடுகளுள் மிக அதிகமான சுதந்திரத்தை மக்களுக்கு...

ர.சு.நல்லபெருமாள்

எழுதும்

# போராட்டங்கள்

புதிய தொடர் கதை



கல்கி

ஆகஸ்ட் 2உ இதழில் ஆரம்பம்

...அளிக்கும் நாட்டில் நீங்கள் வசித்தாலும் நீங்கள் சோம்பேறியாகவும் நடப்பது நடக் கட்டும் என்று செயலற்றும், மன உறுதி யின்றியும் வாழ்ந்தால் நீங்கள் சுதந்திர மனிதர் அல்ல; அடிமையே. சுதந்திரம் என்பது நீங்களே எடுத்துக் கொள்ளவேண் டிய ஒன்று; பிறரிடம் யாசித்துப் பெறுவ தல்ல.

-இக்நாஸியோ ஸிலோன்

# காணக்கிடைக்காத தங்கம்



## அத்தியாயம் 14

அருணகிரிக்குச் சிரிப்பு வந்தது. முட்டிக்காலில் வாயைப் புதைத்துக்கொண்டு ஓசையின்றிச் சிரித்தான் அவன்.

'ஓ!... கடந்த சில தினங்களுக்கு முன் நான் டயர் வாங்கி வருவதற்காக மில்லர் ஏரிச் சாலை வழியே போனபோது அங்கே அந்தப் பெண்கள் உயர் நிலைப் பள்ளிக்கு எதிரில் சைக்கிளுடன் நின்றுகொண்டிருந்த செல்லத்துரை என்னைப் பார்த்தும் பாராதவன் போல் ஒதுங்கிப் போனதற்குக் காரணம் இப்போதுதான் புரிகிறது! ஆமாம்! இந்தப் பெண் நிர்மலா அந்தப் பள்ளியில்தானே படிக்கிறாள்? பள்ளி முடிந்து அவள் வெளியே வருகிற நேரம் அது. அன்றையத் தினத்துக்கு முந்தைய தினம்தான் என் மூலமாக அவன் அவளுக்குக் கடிதம் கொடுத்து அனுப்பியிருந்தான். ஆகவே, அந்தக் கடிதத்துக்கு அவளிடமிருந்து என்ன பதில்— அல்லது எத்தகைய சமிக்ஞை— வருகிறது என்பதைத் தெரிந்துகொள்ளவே அவன் அங்கு வந்து காத்திருந்தான் போலும்!'

அருணகிரியால் சிரிப்பை அடக்க முடியவில்லை. முட்டிக்கால்களுக்கு இடையே முகத்தை நன்றாகப் புதைத்துக்கொண்டான். அவனது வளைந்த முதுகு குலுங்கிக் குலுங்கித் தணிந்தது.

'அட, பைத்தியக்காரா! உனது அந்தக் காதல் கடிதத்துக்கு அவளிடமிருந்து நீ எப்படியடா பதிலை எதிர்பார்த்தாய்? அது நான் எழுதியது என்றல்லவா சற்றுமுன் வரையில் அவள் எண்ணிக்கொண்டிருந்திருக்கிறாள்?'

ஜகசிற்பியன்

அவன் திடுமென்று நிமிர்ந்து திகிலுடன் சுற்றுமுற்றும் பார்த்தான்.

'ஐயோ, என்ன பயங்கரமான சோதனை இது! அந்தக் காதல் கடிதத்தை நான் எழுதி நானே கொண்டு வந்து கொடுத்ததாக எண்ணி யிருந்த அவள், அன்றே அதைத் தன் தந்தை யிடமோ தாயாரிடமோ காட்டி யிருந்தா ளானல் என் கதி என்ன ஆகி யிருக்கும்? இம் மாதிரி காவாலித்தனமான காரியம் செய்த வன் யார் என்பதை அறிய அவர்கள் முற் பட்டிருப்பார்கள்! நான் வேலை செய்யும் இடம் இந்தப் பெண்ணுக்குத் தெரியுமாதலால் என்னை வெகு சுலபமாகக் கண்டுபிடித்து விட்டுமிருப் பார்கள்! அப்புறம் அவர்களுடைய வீட்டில் வேலை பார்க்கும் முத்தம்மாவின் தம்பியே நான் என்பதும் தெரிய வந்திருக்கும்! அதன் விளைவு ?....'

இதற்குமேல் நினைத்துப் பார்க்கவே நெஞ் சம் நடுநடுங்கினன் அருணகிரி.

'இப்போது மட்டுமென்ன? அந்தக் கடிதம் நான் எழுதியதல்ல — என் சைக்கிள் ரிப்பேர்க்

கடை முதலாளியின் மகன் கொடுத்தனுப்பியது என்று சொன்னதை அவள் முழுக்க நம்பி யிருப்பாளா? அல்லது சும்மா அப்படிச் சரடு விடுகிறேன் என்று எண்ணி, நாளை பொழுது விடிந்ததும் என்னை இழுத்துப் போய்த் தன் தாயாரின் எதிரில் நிறுத்தி விசாரிக்கச்சொல்லுவாளா? இந்தத் தீர்மானத்துடன் அவள் போனதால்தான் என்னைப் பார்த்துக் கடைசியில் அம்மாதிரி மந்தகாசச் சிரிப்புச் சிரித்தாளா?'

அளவுகடந்த பயத்தால் அருணகிரியின் மெலிந்த உடல், நிலை கொள்ளாமல் பதறிப் படபடத்தது. சற்றைக்குப் பின் அவன் வேகமாகத் தலையாட்டிக் கொண்டான்.

'இருக்காது! அவள் அப்படிச் செய்ய மாட்டாள்! அவ்வாறு செய்யும் நோக்கம் இருந்தால் அந்தக் கடிதத்தை என் கண் எதிரே கிழித்தெறிந்திருக்க மாட்டாள் அல்லவா? தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போயிற்று!'



## திருமணம்



திருச்சூர் முன்னாள் எம். எல். ஏ. திரு டி. பி. சீதாராமன் அவர்கள் குமாரத்தி சௌபாக்கியவதி **யக்ஞலக்ஷ்மி, B. A.**க்கும் தஞ்சை மாவட்டம், தப்பளாம் புலியூர் திரு வி. ராமச்சந்திர அய்யர் B.A. அவர்களின் குமாரர் சிரஞ்சீவி **ராமரத்தினம், M. Tech.** (Asst. Development Engineer Jyoti Ltd., Baroda)க்கும் திருச்சூர் மதிக்குன்னு எஸ்டேட்டில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள் !

## திருமணம்



கல்கி காரியாலயத்தைச் சேர்ந்த திரு எம். எஸ். சிவஸ்வாமியின் புதல்வி சௌபாக்கியவதி **எம். எஸ். ஸரஸ்வதிக்கும்**, பம்பாயிலுள்ள திரு கே. ஆர். ராமச்சந்திரய்யரின் புதல்வன் சிரஞ்சீவி **கே. ஆர். ரகுராமனுக்கும்** சென்ற மே மீ 25ந் தேதி தியாகராயநகரில் திருமணம் சிறப்பாக நடந்தேறியது. நண்பர்களும் உறவினர்களும் ஏராளமாக வந்திருந்து மணமக்களை வாழ்த்தி ஆசி கூறினர்.

வாழ்க மணமக்கள் !

நெஞ்சைத் தடவி விட்டவாறு நிம்மதிப் பெருமூச்சு விட்டான் அருண கிரி. ஆனாலும் அவனுக்கு அங்கு இருப்பே கொள்ள முடியவில்லை. எங் கேயாவது எழுந்து ஓடிவிட வேண்டும் போல் உடலும் உள்ளமும் பரபரத்தன. ஆனால் இந்த நடுச்சாம வேளையில் எங்கே போவது ?

''அயோக்கிய ராஸ்கல்! எவ்வளவு பெரிய சிக்கலில் என்னைச் சிக்க வைத்து விட்டான் அந்தப் பயல்! இருக்கட்டும். நாளை அவனை ஒரு கை பார்த்துவிடு கிறேன் !'

தன் மனத்துக்குள் செல்லத்துரையை இவ்வாறு கறுவித் திட்டிக் கொண்டே படுக்கையில் துவண்டு சாய்ந்தான் அருணகிரி.

* * *

ஆச்சரியம்தான்! கடந்த பல தினங் களாகத் தனக்குத் 'தண்ணி' காட்டிக் கொண்டு வரும் தன் 'சீடப்பிள்ளை' அருணகிரியின் 'கொழுப்பை' அடக் கியே தீருவது என்று கங்கணம் கட்டிக் கொண்டு தனது முதலாளித்துவக் கெடுபிடிகளைப் பல வகையிலும் பிர யோகித்து வந்த ஏழுமலை இன்று திடீ ரென்று அவனிடம் சரணாகதி அடைந்து விட்டான் !

''ஏண்டா கண்ணு ! காலம்பற நாஸ்தா பண்ணினியா?'' என்று அவன் அன்பொழுகக் கேட்டு, ''இந்தா, போய்ப் பண்ணிப்பிட்டுச் சீக்கிரம் வா!'' என்றவாறு நாலணா எடுத்துக் கொடுத்தான்.

காலை ஒன்பது மணிக்கு நடந்த விஷயம் இது. பிறகு பதினொரு மணி வாக்கில், ''ஏண்டா, சோங்கு! இன்னா ஒரு மாதிரியா இருக்கிறே? இந்தா, காக்கா கடைக்குப் போய் ஸ்ட்ராங்கா சிங்கிள் டீ அடிச்சுட்டு, அப்படியே எனக் கும் சர்க்கரை கம்மியா ஒரு டீ வாங்கிக் கினு வா!'' என்று இருபது பைசா கொடுத்தனுப்பினான்.

அப்புறம் பகல் ஒரு மணிக்கு, தான் சாப்பிட்டானதும் எழுந்து வந்து வெற்றிலை போட்டபடி, ''டேய், கண்ணு! நேரமாச்சே, சாப்பிட வரலே? கையைக் கழுவிக்கிட்டு வாடா! சாப்பாடு வைச்சிருக்கிறேன், போய்த் துண்ணு!'' என்றான்.

அருணகிரிக்கு ஒரே ஆச்சரியம் ! தன் கண்ணையும் காதையுமே நம்ப முடி யாமல் திக்குமுக்காடித் திணறினான்.

'என்ன இதெல்லாம் நாடகம்போல் இருக்கிறதே! இத்தனை நாட்களும் ஒரு நாயைவிட மோசமாக என்னை நடத்தி வந்த இவன் இன்று திடீரென்று இந்த



''நீங்கள் ஸ்கூட்டரை ஸ்டார்ட் பண்ணு வதற்குள் நான் டாக்ஸி பிடித்து மாட்னி பார்த்துவிட்டு வருகிறேன். பிறகு, இருவரும் நைட் - ஷோ போகலாம்.''

அளவுக்குக் குழைந்து மசிந்து பாசத்தை யும் பரிவையும் மழையாய்ப் பொழி கிறானே! இவ்வளவும் நிஜம்தானா ? இல்லை, இன்றோடு என் கணக்கைத் தீர்த்துக் கட்டித் துரத்திவிடுவது என்ற திட்டத்துடன் இம்மாதிரி குறும்புத்தன மான உபசரணைகள் பண்ணுகிறானா ? அல்லது இனிமேலும் தனது கெடுபிடி ஜபர்தஸ்துகளை நீடித்துக் கொண்டு போவதில் பலனில்லை — அவை பலிக்க வும் பலிக்காது — அதனால் நஷ்டமே ஏற் படும் — நான் வேலையை விட்டு ஓடிப் போனால் அப்புறம் என் மாதிரி ஆள் கிடைப்பது கஷ்டம் — என்பதையெல் லாம் புரிந்து கொண்டு காரிய லாபத் துக்காக இப்படி ஒரேயடியாக அன்பு காட்டுகிறானா?'

இவ்வாறு எண்ணித் தன்னையே உஷார்ப்படுத்திக் கொண்ட அருணகிரி தனக்கு ஏற்பட்ட வியப்பு உணர்ச்சி யைக் கொஞ்சமும் வெளிக்காட்டிக் கொள்ளாமல் எப்போதும் போல் சாதாரணமாகவே, ''ஆகட்டும்பா !'' என்றவாறு கைகால்களைக் கழுவிக் கொண்டு சாப்பிடப் போனான்.

அன்று நல்ல சுவையான உணவு வகைகள். திருப்தியாகச் சாப்பிட்டு விட்டு எழுந்து வந்தான்.

'இன்றைக்காவது அந்தச் சோற்றுக் கூடைக்காரப் பெண் கனகா வந்திருப் பாளா ?'

வயிறு நிறைந்திருந்ததால் வெகு உற்சாகத்துடன் அந்தப் பள்ளிக் கூடத்தை நோக்கி நடந்தான். மதில் சுவர் ஓரமாக வந்து உள்ளே எட்டிப்

பார்த்த அவனுக்கு இன்றும் ஏமாற்றமே! அவள் வரவில்லை.

'சரி; இதோடு அவளை மறந்துவிட வேண்டியதுதான்!' என்று தனக்குள் சலிப்புடன் முணுமுணுத்தவாறு அங்கேயே சற்று நேரம் உட்கார்ந்திருந்து விட்டு எழுந்து வந்து வேலையில் இறங்கினான்.

மாலை ஆறு மணியானதும் வழக்கம் போல் வேலைகளை ஏறக்கட்டி விட்டுச் சட்டையை எடுத்து மாட்டிக்கொண்டு, ''நான் வரேம்பா!'' என்று குரல் கொடுத்தான்.

''புறப்பட்டுட்டயா கண்ணு? போ, ஊட்டுக்குப் போய் நல்லாப் படி!'' என்று ரொம்பவும் கரிசனமாகச் சொன்னான் ஏழுமலை.

அருணகிரிக்கு உள்ளூறச் சிரிப்பு வந்தது. அவன் தலை குனிந்தபடியே புறப்பட்டான்.

ஒரு நூறு கெஜ தூரம் போனபோது எதிரே சைக்கிளில் செல்லத்துரை வருவதைக் கண்டு தயங்கி நின்றான். ஆனால் அவனோ இவனைப் பாராதவன் போல் சைக்கிளை வேகமாக மிதித்தான்..

''என்னப்பா, செல்லத்துரை!''

சட்டென்று 'பிரேக்' போட்டு சைக்கிளின் வேகத்தைக் குறைத்த செல்லத்துரை ஓர் அலட்சிய மிடுக்குடன் அருணகிரியைத் திரும்பிப் பார்த்தான். பிறகு பெடலை ரிவர்ஸில் சுழற்றியபடி சாலையில் ஒரு வட்டமடித்துத் திரும்பி வந்து அவனருகில் டக்கென்று இடது காலை மட்டும் தரையில் ஊன்றிக் கொண்டு நின்று, 'என்ன?' என்பது போல் தலையை நிமிர்த்தினான்.

அருணகிரியும் அவனைப் போலவே செருக்குடன் நிமிர்ந்து வலது கையை இடுப்பின் மேல் ஊன்றியவாறு, ''என்ன பிரதர்! சைக்கிள் ஷாப்புக்கு இப்பத்தான் போறயா?'' என்று ஒருவித மந்தகாசப் புன்முறுவலோடு வினவினான்.

''ஆமாம்'' என்று அமர்த்தலாகத் தலையாட்டிய செல்லத்துரை, ''என்ன சமாசாரம்?'' என்றான் புருவங்களை மேலுயர்த்தியபடியே.

''ஒண்ணுமில்லே!'' என்று அருணகிரியும் அதே அமர்த்தலுடன் பதிலிறுத்திவிட்டு அவனை ஏற இறங்கப் பார்த்து, ''உனக்கு ஒரு விஷயம் தெரியுமா பிரதர்? இப்ப நான் வசந்தநகரிலே குடி இல்லே!'' என்றான் மெல்லச் சிரித்துக் கொண்டே.

இத்தனை நாட்களும் தன்னைக் கண்டால் மரியாதைக்கு அறிகுறியாக நெளிந்து புன்னகை காட்டிவிட்டுத் தலை குனிந்து ஒதுங்கிப் போய்விடுகிறவன் இன்று இத்தனை செருக்குடன் நிமிர்ந்து நின்று பேசுவதைக் கண்டு ஆச்சரியப்பட்டான் செல்லத்துரை. அதை வெளியே காட்டிக் கொள்ளாமல், ''ஓகோ!.... வேறே எங்கே குடிபோய் இருக்கிறே?'' என்று பெரிய மனிதத் தோரணையில் குரலைத் தாழ்த்தி நிதானமாகக் கேட்டான்.

''அண்ணைக்கு ஒரு நாள் ஓர் இஞ்சினியர் வீட்டிலே என்னமோ லெட்டர் கொடுக்கச் சொல்லி என்னை அனுப்பினியே, அதே வீட்டில்தான்!''

திடுமென்று சைக்கிளை விட்டுக் கீழே இறங்கிய செல்லத்துரை தன்னை மீறிய பரபரப்புடன் அவனைக் குறுகுறுவெனக் கூர்ந்து நோக்கினான். உடனே தன்னைச் சமாளித்துக் கொண்டு, ''அப்படியா? அந்த பங்களாவிலா?'' என்று கேலியும் அவநம்பிக்கையும் கலந்த குரலில் கேட்டான்.

''ஆமாம்; அந்தப் பங்களாவைச் சார்ந்த அவுட்—ஹவுசிலே!''

செல்லத்துரையின் முகம் வெளிறிச் சிறுத்தது. ஏதேதோ கேள்விகள் கேட்க வேண்டும் என்று அவன் மனத்துள் துடிப்பது முகத்தில் நன்றாகத் தெரிந்தது. ஆனால் எதையும் கேட்கத் துணிவில்லாதவன் போல் அசட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டே, ''அப்படியா?... ஐ ஆம் வெரி கிளாட்!'' என்று குழறினான்.

விஷமப் புன்னகையுடன் அவனைக் கூர்ந்து நோக்கிய அருணகிரி, ''அது சரி, பிரதர்! உன் காலேஜ் வெக்சரர் முன்னே மாதிரி யாருக்காவது அர்ஜண்டா லெட்டர் எழுதி உன் கிட்ட கொடுக்கலியா?... இருந்தா கொடேன், நான் கொண்டு போய்க் கொடுக்க வேண்டிய இடத்திலே கொடுத்துடறேன்?'' என்றான்.

இதைக் கேட்டுக் கோழி திருடிய திருடன் போல் விழித்த செல்லத்துரை சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்டு மெல்லச் சிரித்தான், ''இல்லே, அருண்! அப்படி ஒண்ணும் இல்லே! அண்ணைக்கு என்னமோ அவர் அவசரக் கடிதம்னு சொல்லிக்கொண்டதாலே நானும் அதைக் கொடுக்கிறதாக ஒப்புக்கிட்டேன். இனிமேல் அம்மாதிரி அவரும் கொடுக்கமாட்டார்; நானும் வாங்க மாட்டேன்.... ஏன்னா, அதெல்லாம் ரொம்பச் சங்கடமாயிருக்குது ...'' என்று கூறிக் கொண்டே வெகு நேச பாவத்துடன் அருணகிரியின் முதுகைத் தட்டினான்.

''ஆமாம், பிரதர்! நானும் அதைச் சொல்லத்தான் இப்ப உன்னைக் கூப்பிட்டு நிறுத்தினேன். இனிமேல் அப்படிப்பட்ட கடிதம் கொடுக்கிற வேலை

யெல்லாம் வச்சுக்காதே! அது உனக்கு மட்டுமில்லே, மற்றவங்களுக்கும் சங்கடமாப் போயிடும்!'' என்று அடித் தொண்டையில் அழுத்தம் திருத்தமாகச் சொல்லிவிட்டுச் சரேலெனத் திரும்பி நடந்தான் அருணகிரி.

சவுக்கடி பட்டவன்போல் உடம்பை நெளித்து நிமிர்ந்த செல்லத்துரை பிரமை பிடித்தவன் மாதிரி சற்று நேரம் அப்படியே விக்கித்து நின்றான். பிறகு சைக்கிளில் ஏறவும் மறந்தவன் போன்று அதைத் திருப்பித் தள்ளிக்கொண்டு சைக்கிள் கடையை நோக்கி மெல்ல நடக்கலானான்.

ஏதோ ஓர் ஆத்திரத்தில் கிளர்ந்த துணிச்சலுடன் அருணகிரி செல்லத்துரையை அப்படி வெடுக்கும் துடுக்குமாகப் பேசிவிட்டானே தவிர, அப்புறம் அவனுக்கே புரியாத ஒரு பயம் அவனைப் பிடித்து உலுக்க ஆரம்பித்து விட்டது.

வழக்கம்போல் வேலை முடிந்ததும் வீட்டுக்குப் போகாமல் நேரே கிங்ஸ் பார்க்கில் வந்து உட்கார்ந்தான். இனி இங்கிருந்து கிளம்ப இரவு எட்டு மணியாகும்.

மாலை மயங்கி மசி பூசும் நேரம். அந்தப் பூங்காவின் ஜீவ எழில் உயிர்ப்படையும் நேரமும் இதுதான். இந்த நேரத்தில் அங்கு விரியும் அழகுக்கு உவமை இல்லை. அது உவமையையே உவமையாக்கும் அழகு.

தினமும் இவ்வழகுக் காட்சிகளில் மனத்தைப் பறி கொடுத்துத் தன் கவலைகளையெல்லாம் மறந்திருப்பான் அருணகிரி. தனது சூன்யமான வாழ்க்கைக்கும் ஏதோ ஓர் அர்த்தம் இருக்கிறது என்று அவன் இங்கேதான்— இந்நேரத்தில்தான் — உணர்வான்.

ஆனால் இன்று அந்த உணர்வுகூட அவனுக்குத் தட்டுப்படவில்லை. அத்தனை குழப்பமும் திகிலும் மனத்திலே சூழ்ந்து அவனை உருட்டிப் புரட்டிக் கொண்டிருந்தன.

கந்தர்வ ஓவியன் தீட்டிய அற்புத எழில் ஓவியமாய் விளங்கிய அவ்விசாலமான பூங்காவில் அன்று ஏனோ ஜனக் கூட்டம் அதிகமில்லை. இத்தனைக்கும் அன்றைய தினம் வசந்த மண்டபத்தில் வாத்தியக் கோஷ்டியினரின் இசை நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது.

அருணகிரி அப்படி ஒன்றும் பெரிய கலா ரசிகன் அல்ல. கேவலம் சினிமா பார்க்கும் வழக்கம் கூட அவனிடம் கிடையாது. அதற்குக் காரணம், காசு கொடுத்துச் சினிமாப் பார்க்க வேண்டியிருப்பதுதான்! காசுக்கு எங்கே



"என் கணவருக்குக் குழந்தை உள்ளம் என்பதை நீ எப்படிக் கண்டு பிடித்தாய்?"



போவான் அவன்? அதனால் விலை கொடுத்து ரசிக்கக் கூடிய பொழுது போக்குச் சங்கதிகள் எதிலும் அவனுக்கு நாட்டம் இருப்பதில்லை; நாட்டத்தை ஏற்படுத்திக் கொள்வதும் இல்லை.

இருக்கவே இருக்கிறது பார்க்! வாழ்நாள் முழுவதையும் கூட அங்குள்ள பார்க்குகளில் சுற்றிச் சுற்றியே இனிதாகப் போக்கி விடலாம். அத்தனை வற்றாத — சலிப்பு உண்டுபண்ணாத — எழில் கொட்டிக் கிடக்கும் பூங்காக்கள் அவை. ஆனால் அப்படி ஒருவன் இருக்க, பணக்காரனின் வயிற்றில் சோம்பேறியாய்ப் பிறக்க வேண்டும், அல்லது பிச்சைக்காரனின் வயிற்றில் பிறந்து திடீர்ப் பணக்காரனாக வேண்டும். இவ்விரு 'வரங்களும்' பெறாதவர்கள் பாவம், என்ன செய்வார்கள்? மாலைப் போதுகளில் வந்து ஓர் அரை மணி நேரமோ ஒரு மணி நேரமோ பராக்குப் பார்த்து விட்டுப் போக வேண்டியதுதான்!. அப்படி வருகிறவர்களிலும் பல ரகங்கள். அவற்றில் அருணகிரி ஒரு தனி ரகம்.

அவன் போகாமல் இருக்கும் பொழுதைப் போக்கவா இந்தப் பக்கம் வருகிறான்? ஒரு விசித்திரமான காரணத்தை முன்னிட்டே கடந்த சில தினங்களாக இங்கு வருவதை வழக்கப்படுத்திக் கொண்டிருக்கிறான். அந்தக் காரணம் தெரிந்ததுதானே?

இப்படி வருகிறவனுக்கு இப்பூங்காவின் கவிதா நயம் செறிந்த அழகுகளை ரசிப்பதை விட அங்கு நடைபெறும் வாத்திய இசை நிகழ்ச்சியே மனத்துக்குப் பெரிதும் பிடித்தமானதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை அல்லவா?

இசை நிகழ்ச்சி நடக்கும் தினத்தன்று சற்று விரைவாகவே வந்து அவ்வசந்த

மண்டபத்தின் அருகில் போய்ப் புல் தரையில் உட்கார்ந்து கொள்வான். அவர்கள் வாசிப்பதை மிக உற்சாகத்துடன் வேடிக்கை பார்ப்பான்.

ஆனால் இன்று அந்த இசை நிகழ்ச்சி கூட அவனுடைய கவனத்தைக் கவரவில்லை. அது நிகழும் மண்டபத்தருகில் போய் அவன் அமரவும் இல்லை. சற்றுத் தொலைவிலேயே ஒரு சிமெண்ட் பெஞ்சில் உட்கார்ந்து விட்டிருந்தான்.

'அந்தச் செல்லத்துரைப் பயலிடம் ஏன் அப்படிப் பேசினேன்? அவ்வளவு ஆத்திரமும் கோபமும் எனக்கு ஏன் வந்தன? ஊர் உலகத்தில் நடக்காத காரியமா அது? அந்தப் பெண் அவனை எங்கேயாவது பார்த்து அர்த்தமில்லாமல் பல்லைக் காட்டியிருப்பாள்; அதை இவன் அர்த்தப்படுத்திக்கொள்ள முயன்றிருக்கிறான். இதிலென்ன தவறு? அவளே இன்னொரு நாள் இவனைப் பார்த்துக் காறித் துப்பிவிட்டுப் போனாளானால் இவனும் அலட்சியமாகத் 'தாங்க்ஸ்' என்று சொல்லிவிட்டுப் போவான்! அவ்வளவுதானே? இந்த அற்ப விஷயத்தைப் பெரிதாக எடுத்துக் கொண்டு அவனை வழி மடக்கி நிறுத்தி அத்தனை கடுமையாக எச்சரித்திருக்க வேண்டுமா? அது தேவை இல்லையே!'

இத்தகைய எண்ண ஓட்டத்தை மறுத்து முறிப்பவன்போல் வேகமாய்த் தலையாட்டிக் கொண்டான் அருணகிரி.

'இல்லை; நான் செய்ததுதான் சரி. ஏனென்றால் அந்தக் காவாலிப் பயல் தனது காதல் விளையாட்டுக்கு என்னையல்லவா பலிக் கிடாவாக்கியிருக்கிறான்? ஏதோ என்னுடைய நல்ல காலம், அந்தப் பெண் தன் பெற்றோரிடம் என்னை மாட்டி விடாமல், கொஞ்சம் நிதான புத்தியோடு நடந்து கொண்டதால் தப்பினேன். இல்லையானால் எனக்கு மட்டுமல்ல, நான் வந்து ஒண்டிக்கொண்டிருக்கும் என் அக்காவின் குடும்பத்துக்கும் என்னென்ன சிரமங்கள் ஏற்பட்டிருக்குமோ? எனவே, இனிமேலாவது அந்தத் தறிதலைப் பையன் என் விஷயத்தில் உஷாராயிருக்கும் பொருட்டு நான் அவனை இன்று அவ்வாறு எச்சரித்தது சரிதான்.'

தன்னையே பாராட்டிக் கொள்கிறவன்போல் தன் தொடைமீது ஒரு தட்டுத் தட்டிப் புன்முறுவல் பூத்துக் கொண்ட அருணகிரி சட்டென்று வேறோர் எண்ணம் மனத்தில் குறுக்கோட்டமிடவே, தட்டிய தொடையை மெல்லத் தடவினான்.

'ஆமாம்; அந்தத் திமிர்பிடித்த பயல் என்னுடைய எச்சரிக்கைப் பேச்சைக் கேட்டுப் பயந்துவிட்டான் என்பதென்னவோ உண்மைதான். ஆனால் அவன் இவ்விஷயத்தை இதோடு விட்டுவிடுவானா? என்னைப் பழி வாங்கத் தன் அப்பனிடம் போய் என்மேல் ஏதாவது இல்லாத பொல்லாத சங்கதிகளைக் கோள் மூட்டி விட்டானானால் என்ன செய்வது? அந்தக் கைநாட்டுப்பேர்வழியான ஏழுமலை தன் பிள்ளையின் பேச்சை வேத வாக்குப் போல் எடுத்துக்கொள்கிறவன் ஆயிற்றே!'

திகிலும் குழப்பமுமாகத் தலையைத் தாங்கிப் பிடித்துக் கொண்ட அருணகிரி, அவ்விடத்தி லிருந்து வேறெங்காவது போய் உட்காரலாம் என்று எண்ணி எழுந்த அதே சமயம் அருகில் ஏதோ தடாலென்ற சத்தம் கேட்டுத் திரும்பினான்.

அங்கே, குழந்தைப் பையன் ஒருவன் தனது மூன்று சக்கர சைக்கிள் வண்டியைச் சிமெண்ட் பெஞ்சு மேல் கொண்டு வந்து மோதிவிட்டு அந்த அதிர்ச்சியால் ஏற்பட்ட பயத்துடன் சுற்று முற்றும் திருதிருவெனப் பார்த்துக் கொண்டிருந்தான். நல்ல நிறமாகவும் கொழு கொழுவென்றும் விளங்கிய அக் குழந்தைப் பையனுக்கு வயது சுமார் மூன்று இருக்கும். பெரிய பணக்கார வீட்டுப் பிள்ளை என்பது பார்க்கும்போதே நிச்சயமாகியது.

''என்னடா, சஞ்சீவ்! இப்படித்தான் சைக்கிள் விடறதா?''

திகைப்புடன் குழந்தைப் பையனைப் பார்த்துக் கொண்டு நின்ற அருணகிரி இந்தக் குரல் கேட்டுச் சட்டென்று நிமிர்ந்தான்.

சற்றுத் தொலைவில் குள்ளமும் பருமனுமான பெண்மணி யொருத்தி ஓர் அழகிய 'தள்ளு வண்டி'யில் சிறு குழந்தை யொன்றை உட்கார வைத்துத் தள்ளிக் கொண்டு புன்முறுவல் பூத்த முகத்தினளாய் மெல்ல நடந்து வந்தாள்.

அவளுக்கு வயசு முப்பத்தாறுக்கும் மேலே இரண்டொன்றைக் கூடுதலாக மதிக்கலாம். மாநிற மேனி, வெள்ளையில் பச்சைக் கொடிகள் அச்சிட்ட வாயில் சேலை. வெள்ளை ரவிக்கை. பின்னலிட்டுத் தூக்கி முடிந்த கொண்டை. காதில் வெள்ளைக் கல் கம்மல். கழுத்தில் ஒற்றைச் செயின். கையில் வளையல் இல்லை. காலில் மெட்டியும் இல்லை. ஆனால் நெற்றியில் கறுஞ் சாந்துப் பொட்டும், புருவங்களுக்கு மையும் இட்டுத் தீட்டியிருந்தாள். இப்படி நவீன அலங்காரங்களுடன் கவர்ச்சிகரமாக விளங்கினாலும் அவளது முகத்தில் 'படித்த களை' சிறிதும் தென்படவில்லை. (தொடரும்)









**வ. சா. நாகராஜன்**

**ப**ல நாட்களுக்குப் பிறகு, – நாட்கள் என்ன, வருஷங்களுக்குப் பிறகு சங்கரியுடன் சினிமாவுக்குக் கிளம்பினேன். அபூர்வமாக வரும் நல்ல படம். நல்ல கூட்டம். சென்னையில் அலுவலகம், வீடு இவற்றைத் தவிர வேறு ஓர் உலகம் உண்டு – சினிமாத் தியேட்டரின் வாசல். எத்தனைவித மனிதர்கள்! எத்தனை ஜோடிகள்! கல்லூரி கோஷ்டிகள்! இருபது வருஷங்களுக்கு முன்னால் நானும் சங்கரியும் இவர்களைப் போல் எத்தனையோ தடவை இங்கே வந்திருக்கிறோம். அந்த இன்பத்தை ! அந்த வயசில் அநுபவித்தால்தான் உண்டு. இப்போது நான் விரும்பினாலும் கவலையற்ற அந்த மன நிலை வருமா ?

படம் ஆரம்பமாயிற்று. ஆரம்பப் பகுதிகள் எல்லாம் ஒரே ஹாஸ்யக் கோலாகலம். கதாநாயகன்கூடச் சிரிப்பு நடிகராக மாறியிருந்தார். ஒரே கல்லூரி அட்டகாசங்கள் !

காதல் கதைகளில்தான் எத்தனை விதக் கதைகள்! குடும்பக் காதல், கல்லூரிக் காதல், ஏழையின் காதல், படகோட்டியின் காதல்! கோலார் தங்க வயல் வற்றிப் போய்விட்டது. அதே மாதிரி கடல் நீர் வற்றினாலும் வற்றிப் போகலாம். காதல் கதைகள் மாத்திரம் வற்றவே வற்றாது போலிருக்கிறது! காதல் என்பது இல்லையானால் கதாசிரியர்கள், சினிமாக்காரர்கள் இவர்களுக்கெல்லாம் பிழைப்பே இல்லாமல் போய்விடும்!

இடைவேளைக்குப் படம் விட்டவுடன் எழுந்து வெளியே போய்விட்டு வந்தேன். திரும்பும்போது விளக்குகள் அணைந்து, விளம்பரங்கள் முடிந்து படம் ஆரம்பமாகிவிட்டது. இருட்டில் தட்டுத் தடுமாறி இடத்துக்கு வந்து உட்கார்ந்ததும் சங்கரி என்மீது சாய்ந்து காதினுள் கிசுகிசுத்தாள். ''அதோ பாருங்கள், முன் வரிசையில் நாலாவது நாற்காலியில். யார் தெரிகிறதா...?''

கண்களை இடுக்கிக் கொண்டு எம்பிப் பார்த்தேன். தெரியவில்லை.

''தெரியவில்லையா...? கல்யாணி !''

இருட்டுக்குக் கண்கள் பழக்கமாகி ஒரு வழியாக உருவத்தின் கோடுகள் தெரிந்தபோது – ஆம், கல்யாணிதான் ! பக்கத்தில்...? பக்கத்தில்....?

படத்தில் ஏதோ பெரிய சிரிப்புக் கட்டம். தியேட்டர் முழுதும் ஒரே ஆரவாரம். கல்யாணியின் பக்கத்தில் இருந்தவன் பெரிதாகச் சிரித்தபடி அப்படியே அவள் மடியில் விழாத குறையாகச் சாய்ந்தான். அவன் கை அவள் தோள் பட்டையைப் பிடித்துக் கொண்டிருந்தது.

அவன் யார்....? இருளில் முகம் சரியாகத் தெரியவில்லை.

எனக்குப் படபடவென்று வந்தது. படத்தில் மனம் செல்லவில்லை. சங்கரி மூச்சை அடக்கிக் கொண்டு அவர்களைப் பார்த்தபடியே இருந்தாள்.

நேரம் ஆயிற்று. ஏதாவது ஹாஸ்யப் பகுதியிலோ, அல்லது சண்டைக் காட்சியிலோ தியேட்டரில் கலகலப்பு ஏற்படும்போதெல்லாம் இருளைச் சாதகமாக்கிக் கொண்டு கல்யாணியின் பக்கத்தில்

இருந்தவன் அவன்மீது சாய்ந்தபடி இருந்தான். யாராயிருக்கும்...? இருளில் முகம் தெரியவில்லை.

ஒரு காட்சியில் கொஞ்சம் அதிகமாக வெளிச்சம் வந்தது. அப்போது அவன் முகம் கொஞ்சம் தெரிவது போலிருந்தது. அந்தச்சமயம் அவனும் ஒருகணம் பின்பக்கம் திரும்பிப் பார்த்துவிட்டுக் கல்யாணியின் மீது இருந்த கையைச் சற்று எடுத்துக் கொண்டான்.

இவனு...? இவனைப்பார்த்திருக்கிறேனே. ஆம்.. எங்கள் அலுவலகக் காம்பவுண்டிலேயேதான். விவசாய இலாகாவிலோ, சிவில் சப்ளையிலோ....

ஒருவாறு படம் முடிவடையும் கட்டம் வந்தது. அதற்கு இரண்டு மூன்று நிமிஷங்களுக்கு முன்னால் அவர்கள் எழுந்து வெளியேறி விட்டார்கள். கதவருகில் போகும் போது அவன்மீது வெளிச்சம் விழவே முகம் நன்றாகத் தெரிந்தது. ஆம், சந்தேகமே இல்லை. விவசாய இலாகா ராஜரத்னம் செக்ஷனில்தான் அவனைப் பார்த்திருக்கிறேன்.

பஸ் ஸ்டாண்டுக்கு வந்தோம். அதன்பின்னர் தான்சங்கரிக்குப் பேசவே வாய் எழுந்தது. "அவன்



யார்...? உங்களுக்கு ஏதாவது தெரியுமா ?"

"தெரியும்..... விவசாய இலாகாவில் எனக்குத் தெரிந்தவர் பிரிவில் இவனைப் பார்த்திருக்கிறேன்."

அப்போது இருந்த மனநிலையில் இருவருக்குமே அதைப்பற்றி மேலும் பேசுவதற்கு மனம் எழவில்லை.

மூன்று வருஷங்களுக்கு முன்னர் சங்கரியின் ஊருக்குப் போயிருந்தேன். ஐந்தாறு நாட்கள் தங்க நேரிட்டிருந்த அந்த நேரத்தில் அந்த ஊரில் பரிதாபமாக ஒரு மரணம் நேர்ந்தது. இருபது வயதில் ஒரு பெண்ணையும், பதினைந்து வயதில் ஒரு பையனையும் இரண்டு வயது குறைந்த மற்றொரு பிள்ளையையும் அவர்களைப் பெற்றவளையும் நிர்க்கதியாக விட்டு விட்டுத் திடீரென்று காலமானார் அந்த ஊர்ப் பள்ளிக்கூட வாத்தியார். அந்தக் குடும்பத்தின் பிற்காலம் என்ன, யார் நிழலில் போய் அவர்கள் ஒண்டப்போகிறார்கள் என்று கிராமம் முழுவதும் கேள்விக்குறியாக இருந்தது. ஐந்தாறு நாட்கள் கழித்து நான் சென்னைக்கு

வந்தபோது சர்க்கார் அலுவலகம் ஒன்றில் சிலரை வேலைக்கு எடுக்கப் போகிறார்கள் என்று தெரிந்து ஊருக்கு எழுதினேன். அந்தப் பெண் படித்திருந்ததாலும், ஏதோ கஷ்டத்திலும் கொஞ்சம் அதிருஷ்டம் இருந்ததாலும் வேலை கிடைத்தது. சென்னைக்கு வந்து என் ஆதரவிலேயே ஒரு மாதம் இருந்து பிறகு இடம் பார்த்துக் கொண்டு மற்றவர்களையும் அழைத்துக் கொண்டாள்.

கிராமத்தில் இருந்தவரையில் வாசல்படி தாண்டி அறியாத ஒரு பெண், வேலை வாங்கித் தந்த பின்னரும் என் முகத்தை நிமிர்ந்து பார்த்துப் பேசியறியாத ஒரு பெண்ணா இப்படி மூன்று வருஷங்களில் மாறிப் போய் விட்டாள்...? அதுவும் இப்படியா...?

இரவு முழுதும் எங்களிடையே அதுதான் பேச்சு. மேலே என்ன செய்வது...?

''பையனைத் தனியாகப் பார்த்துக் கல்யாணியைக் கல்யாணம் செய்து கொள்கிறாயா என்று கேட்கிறேன். சம்மதித்தால் நாமே உதவி செய்து முடித்து வைப்போம்'' என்றேன்.

''அவன் உடனே சரி என்று சொல்லி விடுவானா....? பையனைக் கேட்டு என்ன பிரயோசனம்? அவனுக்கு அப்பா, அம்மா என்று இருப்பார்களே...? முதலில் அவர்களைப் பார்த்துச் சரிப்பட்டு வருமா என்று பாருங்கள். அவர்கள் சரிப்பட்டு வருவார்கள் போலிருந்தால் கல்யாணியின் அம்மாவைக் கேட்கலாம்'' என்றாள் சங்கரி.

அதுதான் சரி என்று தோன்றிற்று.

சங்கரி யோசித்து யோசித்து மேலும் சொன்னாள். ''அந்தப் பிள்ளையைப் பெற்றவர்களிடம் போய் எடுத்த எடுப்பில், 'இந்த மாதிரி ஏழைப் பெண் ஒருத்தி இருக்கிறாள்' என்று ஆரம்பிக்காதீர்கள். அவர்கள் வேண்டாம் என்று கதவை அடைத்து விட்டால் பிறகு மேற்கொண்டு எதுவும் செய்ய முடியாமல் போய்விடும். பையனும் நழுவப் பார்ப்பான். முதலில் வேறு ஏதாவது ஒரு ஜாதகத்தைக் கொண்டு போய்க் கொடுப்பது போல் கொடுத்து அவர்கள் மனப்போக்கு எப்படி என்று அறிந்துகொள்ளப் பார்க்கலாம். ஒருவேளை அந்த மாதிரிப் பேச்சு நடக்க ஆரம்பித்தால் பையனே நடுவில் குறுக்கிட்டு, 'நான் ஒரு பெண்ணைப் பார்த்திருக்கிறேன். அவளைத்தான் எனக்குப் பிடிக்கிறது' என்று சொன்னால் காரியம் சுலபமாக இருக்கும். யாருக்கும் சந்தேகம் வராதமாதிரியும் இருக்கும்'' என்றாள்.

அடுத்த வாரமே பையனின் வீட்டு விலாசம், பெற்றவர்களைப் பற்றிய விவரம் எல்லாம் தெரிந்து கொண்டு, பம்பாயில் இருக்கும் என் அண்ணா பெண் ஜாதகத்தையும் எடுத்துக் கொண்டு திருவல்லிக்கேணியில் அவர்கள் வீட்டுக்குப் போனேன்.

பையனின் தகப்பனார் என்னை வரவேற்றார். வழக்கமான அறிமுகங்கள் ஆனபிறகு பம்பாய் ஜாதகத்தைப் பற்றிப் பேச்செடுத்தேன். அந்த வீடு சிறிய வீடு. நாங்கள் கூடத்தில் உட்கார்ந்திருந்தோம். இடது பக்கம் இருந்த அறையில் பையன் ஏதோ படித்துக் கொண்டிருந்தான். வலது பக்கம் இருந்த சமையல் அறை நிலைப்படி அருகில் அவன் அம்மா நின்று கொண்டு எங்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

எங்கள் பேச்சு ஒரு கட்டத்தில் நின்றபோது அந்த அம்மாவே முன்னால் வந்து நின்று சொன்னாள். ''பம்பாயில் வளர்ந்த பெண் என்று சொல்கிறீர்கள். குடித்தனப் பாங்கெல்லாம் எப்படி இருக்குமோ என்னமோ? நாமெல்லாம் மெட்ராஸில் இருக்கிறோம். மெட்ராஸ் என்றாலும் பம்பாய்க்காரர்களுக்குச் சின்ன ஊர்தானே...?''

பெண்ணின் குடித்தனப் பாங்கைப் பற்றி வர்ணித்தேன்.

''அதெல்லாம் சரிதான்'' என்று ஒத்துக் கொண்டு 'பாயிண்டு'க்கு வந்தாள் அந்த அம்மாள். ''எங்கள் வீட்டில் இரண்டு பெண்கள். இரண்டு பேருக்கும் கல்யாணம் ஆகிவிட்டது. அவர்களுக்கு நாங்கள் என்னென்ன செய்தோமோ, அதையெல்லாம் எங்கள் பிள்ளைக்கு அவர்கள் செய்ய வேண்டுமென்று எதிர்பார்க்கிறோம். தோடு, பதினைந்து பவுன் நகை, கல்யாணம்—பந்தல் நிறக்க...''

அந்தம்மாளின் பேச்சு கூடத்தைத் தாண்டி எதிர் அறையில் இருந்த பையன் காதில் விழுந்திருக்கும். அம்மாவின் குரல் சன்னக் குரலும் இல்லை; வீடும் பெரிய அரண்மனை இல்லை. ஒருவேளை இப்படி நடந்தாலும் நடக்கலாம் என்று சங்கரி எதிர்பார்த்தபடி நடக்கவில்லை. பையன் ஓடி வந்து குறுக்கே விழுந்து, 'ஐயோ, எனக்கா கல்யாணம்...? வேண்டாம். நான் ஒரு பெண்ணைப் பார்த்திருக்கிறேன், அவளைத்தான் பண்ணிக்கொள்வேன். எனக்கு வைரத்தோடும் வேண்டாம், பதினைந்து பவுன் நகையும் வேண்டாம். அவள்தான் வேண்டும்' என்று சொல்லவில்லை.

''பெண் பம்பாயில் இருப்பவள். அதைப் பற்றி எதற்கும் பையனிடம் ஒரு வார்த்தை கேட்டு விடுங்கள்'' என்று நானாகவே பையனைப் பேச்சில் இழுத்தேன்.

''அதெல்லாம் நாங்கள் பார்த்துச் செய்தால் எதிர் பேச்சுச் சொல்கிறவன் இல்லை. அவன்வரை என்ன சொல்கிறான், தெரியுமோ? பெண் அதிகமாகப் படித்திருக்க வேண்டும் என்பதுகூட இல்லை. நல்ல சிவப்பாக, அழகாக இருக்க வேண்டும். அவனுக்குப் பாட்டு என்றால் கொஞ்சம் பிடிக்கும். அவ்வளவுதான். மற்றப்படி நாங்கள் சொல்வதற்கு எதிர்த்துச் சொல்கிறவன் இல்லை. எதற்கும் ஜாதகத்தைப் பார்க்கிறோம். சரியாக இருந்தால் மேலே பார்க்கலாம்'' என்று ஒரு வழியாகப் பேச்சை முடித்தாள்.

விடைபெற்றுக் கொண்டு கிளம்பினேன். வாசல்படி தாண்டுவதற்கு முன்னமேயே கல்யாணியின் அம்மாவின் உருவம் கண்முன் தெரிந்தது. கல்யாணியைக் கல்யாணம் செய்து கொடுத்து விட்டால் பிறகு பதினேழு வயதாகும் பிள்ளை படிப்பை முடித்துக் கொண்டு வேலைக்குப் போகும் வரை அடுத்த வேளைச் சாப்பாட்டுக்கு என்ன செய்வது என்று கவலைப்படுபவள் வைரத் தோட்டுக்கும் பதினைந்து பவுனுக்கும் எங்கே போவாள்?

வீட்டுக்கு வந்ததும் சங்கரியிடம் எல்லாவற்றையும் சொன்னேன். ''பையனைத் தனி

## செஞ்சுரி பிளவர் மில்ஸ் லிமிடெட்

சௌந்தரராஜன் அண்டு கம்பெனி லிமிடெட்

# இடம் மாற்றம் அறிவிப்பு

8-7-1970ந் தேதியிலிருந்து எங்களது அலுவலகங்கள் கீழ்கண்ட முகவரியில் இயங்கும்:

## இந்தியன் சேம்பர் பில்டிங்ஸ்

(முதல் மாடி)

எஸ்பிளனேட், மதராஸ்-1

(தொலைபேசி எண்களில் மாற்றமில்லை)

நிர். 21043 (2 லைன்கள்)
21364

உதயசூரியன் பிராண்ட்




மைதா, சூஜி, ஆட்டா உபயோகியுங்கள்



GEC
தென்றலின்
சுகமும்,
எழிலான
வாழ்வும் பெற
GEC
எவரெஸ்ட்
மின்
விசிறிகளை
வாங்குங்கள்

யாகப் பார்த்து ஏதாவது கேட்கலாம். ஆனால் அதற்கு முன்னால் கல்யாணியை விவரமாகக் கேட்கணும். அவளை ஒரு நாள் சாயங்காலம் இங்கே வரச் சொல்லுங்கள்'' என்றாள்.

அடுத்த ஞாயிற்றுக்கிழமை கல்யாணி வீட்டுக்கு வந்தாள். சொந்த ஊர்ப் பெண்ணை சங்கரியிடம் உரிமையுடனும் குதூகலத்துடனும் கலகலப்பாகக் கபடமே தெரியாதது மாதிரிப் பேசும் இவள் எப்படித் தைரியமாக ஓர் ஆண் பிள்ளையுடன் தனியாக சினிமாவுக்குப் போகிறாள் என்று எனக்கு வியப்பாக இருந்தது. நான் ஈஸிசேரில் சாய்ந்து பேப்பர் படிக்கும் பாவனையில் இருந்தேன். அந்த இடத்தை ஒட்டியிருந்த அடுத்த அறையில் உட்கார்ந்து சங்கரி அவளை விசாரிக்க ஆரம்பித்து மெதுவாக, ''உன் அம்மா உன் கல்யாணத்தைப் பற்றி ஏதாவது சொல்லிக் கொண்டிருக்கிறாளா?'' என்று தொடங்கினாள்.

''அம்மாவுக்கு என்ன...? சதா அதே கவலைதான்'' என்றாள் கல்யாணி.

''எங்கேயாவது பார்த்துக் கொண்டிருக்கிறாளா....? ஏழைப் பையனாக, உங்கள் குடும்ப நிலைமை உணர்கிறவனாக இருந்து, உன் தம்பி தலையெடுக்கிறவரை உன் குடும்பத்துக்கு உன் பண உதவியைத் தடுக்காதவனாக இருந்தால் பார்க்கலாமா....?''

கல்யாணி ஏதுவுமே பேசாமலிருந்தாள்.

''என்ன இது, கல்யாணி, நான்பாட்டுக்குப் பேசிக் கொண்டே போகிறேன். நீ ஏதுவுமே சொல்லாமல் இருக்கிறாயே...?''

''நான் என்ன சொல்கிறது? எங்கள் குடும்ப நிலை உங்களுக்குத் தெரியும். கல்யாணம் என்றால் ஆண்டிக்குக் கொடுக்கிறதாக இருந்தால்கூட இந்த நாளில் ஆயிரக் கணக்கில் வேண்டியிருக்கும். அது தெரிந்திருந்தும் அம்மா தினம் ஏதாவது சொல்லிக் கொண்டேயிருக்கிறாள். அதைக் கேட்டுக் கேட்டு எனக்கும் அலுத்துப் போய்விட்டது.''

'' அலுத்துப் போய் விட்டது என்று சொல்லி முடித்துவிட முடியுமா...?''

''பின்னே என்ன செய்யச் சொல்கிறீர்கள்? உங்களுக்குத் தெரியாது. எங்கள் ஆபீசுக்கு வந்து பாருங்கள். என்னைப் போல் இருநூறு பெண்களுக்கு மேலே 'எங்கள் பிற்காலம் என்ன, எங்கள் பிற்காலம் என்ன' என்று கேளாமல் கேட்டுத் தவித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களையும் பார்த்து எங்கள் நிலையையும் பார்த்து எனக்கு மனசே மரத்துப் போய் விட்டது !''

''உங்கள் ஆபீசில் கல்யாணம் ஆகாத பெண்கள் இருநூறு பேர்களா இருக்கிறார்கள்....?''

''ஆமாம், அதற்கு மேலேயே இருக்கும். இருபது முப்பது பேருக்கு ஆகியிருந்தால் பெரிசு....''

''இவ்வளவு பேருக்கும் பகவான் என்னதான் நினைத்துக் கொண்டிருக்கிறானோ.... !'' என்று சங்கரி நெட்டுயிர்த்தாள். பின்னர் திடீரென்று, ''அந்த இருநூறு பேரில் எத்தனை பேர் ஜோடி சேர்த்துக் கொண்டு சினிமாவுக்குப் போகிறார்கள்....'' என்று வெட்டினாள்.

சவுக்கால் அடிபட்டவள்போல் கல்யாணி துள்ளினாள். மிரள மிரள விழித்தாள்.

சங்கரி விடவில்லை. ''அதுதான் கேட்கிறேன். அந்த இருநூறு பேர் சொன்னியே, அவ்வளவு பேரில் எத்தனை பேருக்கு ஜோடி கிடைத்திருக்கிறது?'' என்று மீண்டும் அழுத்தம் திருத்தமாகக் கேட்டாள்.

கல்யாணி விழித்தாள். அவளால் ஏதுவுமே பேச முடியவில்லை. திடீரென்று முகத்தில் ஒரு கறுப்புத் திரை சூழ்ந்து கொண்டது.

''நான் கேட்கிறது புரியவில்லையா....? திங்கட்கிழமை சாந்தி தியேட்டரில் மாட்னிக்கு வந்திருந்தியே, நீ மாத்திரம் ஜோடியுடன் வந்திருந்தியா, இல்லை இருநூறு பேரும் ஜோடியோடு வந்திருந்தீர்களா....?''

கல்யாணியின் தலை மேலும் கவிழ்ந்தது.

''உன்னைச் சுற்றி உலகம் என்று ஒன்று இருக்கிறது என்பது உனக்கு மறந்தே போய் விட்டது. மூணு வருஷங்களுக்கு முன்னால் உன் அப்பா திடீரென்று செத்துப் போன போது குடும்பம் நிர்க்கதியாக நின்று அழுது புலம்பியது போய், இப்போது கொஞ்சம் நிமிர்ந்து நிற்கிறதை நினைத்துப் பார்த்தாயா ? அந்த



சாதாரண ஆண்டில் கல்கியில் இடம் பெறும் சிறப்புச் சிறுகதைகள் அனைத்திலும் சிறந்த சிறுகதையைத் தேர்ந்தெடுப்பதில் வாசகராகிய உங்கள் அபிப்பிராயமும் கோரப்படுகிறது. ஆகவே இந்த இதழையோ அல்லது இந்தக் கதை அச்சாகியுள்ள பக்கங்களையோ பத்திரமாக வைத்திருக்கவும்.

ஆசிரியர், கல்கி

மாதிரி நிர்க்கதியாக நிற்கிறது பெரிதில்லை. அது ஈசுவர சங்கல்பம். மனித யத்தனத்தால் அதை மறுபடியும் நிமிர்த்திவிடலாம், மாமாவைப் போல் யாராவது உதவி செய்தால். ஆனால் நீ செய்கிறாயே காரியம், — யாரோ ஒருவனுடன் சினிமாவுக்கு வந்து இருட்டில் அவன் உன் மடியில் புரண்ட போது ரசிக்கிறாயே, — அது என்ன காரியம் தெரியுமா ? அந்தக் கணம் உன் அம்மாவைப் பற்றிக் கொஞ்சம் நினைத்துப் பார்த்தாயா...? அது தெரிந்தால் அவள் மனம் என்ன பாடு படும் என்று நினைத்துப் பார்த்தாயா ?''

அவள் தலையை இன்னும் குனிந்து கொண்டு, ''மாமி....'' என்று முணுமுணுத்துவிட்டு மேலே பேச முடியாமல் கைகளால் முகத்தை மூடிக் கொண்டாள்.

''சரி.... என்ன சொல்லு.... யார் அவன்? உன்னோடு வேலை பார்க்கிறவனா...?''

''ஆமாம்.....''

''எத்தனை நாட்களாக இப்படி அவனுடன் சினிமாவுக்குப் போகிறே....?''

''அன்றைக்குத்தான் முதல் தடவை.....''

''இதை நான் நம்ப வேண்டும் என்று சொல்கிறாயா ? எனக்குக் கல்யாணம் ஆகி

ரொம்ப வருஷம் ஆகி விட்டது. ஆனாலும் அதெல்லாம் எனக்கு மறக்கவில்லை. நாலு பேர் அறியக் கல்யாணம் ஆனவன் சினிமாவுக்குப் பத்து தடவைக்கு மேல் போனபிறகு தான் அவருடன் நெருங்கி உட்கார்ந்து கொள்ளவே எனக்குத் தைரியம் வந்தது. ஆனால் அவன் உன்னை முதல் தடவை சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போன போதே மடியில் புரள ஆரம்பித்து விட்டான். அதை நீயும் அனுமதித்துக் கொண்டிருந்தே!''

குத்துக்காலிட்டு இரண்டு கைகளையும் முட்டுக் கொடுத்து முகத்தை மறைத்துக் கொண்டாள் கல்யாணி.

''சரி, போகட்டும்... அவன் பெயர் என்ன....? அதுவாவது தெரியுமா...? அப்பா அம்மா இருக்கிறார்களா ? உன்னைக் கல்யாணம் செய்து கொள்கிறேன் என்று சொல்லியிருக்கிறானா...?''

கல்யாணி பதில் ஏதும் சொல்ல வில்லை. ஒரு தடவை கைகளை விலக்கிப் பார்த்துவிட்டு மீண்டும் முகத்தை மூடிக் கொண்டாள்.

''சொல்லும்மா... ஏழையாக இருந்தாலும் ஊரிலே கௌரவமாக இருந்த உங்களை இவர்தான் அழைத்துக் கொண்டு வந்து வேலை என்று பண்ணி வைத்து இந்த ஊரில் குடியேற்றினார். அதற்கு நானும்தான் காரணம். அதனால்தான் கேட்கப் பாத்தியதை உண்டு என்று கேட்கிறேன். சொல்லு, அவன் உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்கிறேன் என்று சொல்லி யிருக்கிறானா....?''

அவள் மென்று விழுங்கினாள். ''அதைப் பற்றி இன்னும் பேசவில்லை. ஆனால் பண்ணிக் கொள்வார்'' என்றாள் ஈனசுரத்தில்.

'' இன்னும் அதைப் பற்றிப் பேச்சே ஆரம்பமாகவில்லையா...? சரி. சினிமாவுக்குப் போய், மடியில் விழுந்து புரண்ட பிறகு தான் கல்யாணப் பேச்சு ஆரம்பமாகுமா ?''

கல்யாணி மெல்ல விசிக்கும் சத்தம் கேட்டது. எனக்குப் பரிதாபமாக இருந்தது. என்னதான் இருந்தாலும் அன்னியமான பெண். தகப்பனார் இல்லாதவள். நான் இடைமறித்தேன். ''இன்றைக்கு இதோடு போதும் சங்கரி. விட்டு விடு. நான் அந்தப் பையனின் பெற்றவர்களை சந்தித்துப் பேசிப் பார்க்கிறேன். இதோ பாரும்மா. ஒரு குடும்பம் ஏழையாக இருக்கலாம். அதில் அவமானம் இல்லை. ஆனால் கௌரவம் என்று இருந்தால் அதுவே பெரிய சொத்து. அந்தச் சொத்து போய் விட்டால் எத்தனை லட்சம் இருந்தும் பிரயோசனம் இல்லை. எனக்கு அந்தப் பையனைத் தெரியும். அவனைப் பெற்றவர்களிடம் பேசிப் பார்க்கிறேன். இனி மேல் இந்த மாதிரி சினிமாவுக்குப் போகிறது, பீச்சுக்குப் போகிறதை யெல்லாம் விட்டுவிடு....உங்கள் குடும்பத்துக்கு இதெல்லாம் வேண்டாம். அம்மா கேட்டால் ரொம்பக் கஷ்டப்படுவாள். சரி... வீட்டுக்குப் போய் விட்டு வா....'' என்று அவளை விடுவித்தேன்.

மேற்கொண்டு என்ன செய்வது என்று எங்கள் இருவருக்குமே புரியவில்லை. வைரத் தோடு, பதினைந்து பவுன், பந்தல் நிறைக்கக் கல்யாணம் — இதற்கெல்லாம் குறைந்தால் அந்த அம்மாள் கல்யாணியை ஏற்றுக் கொள்ளப் போவதில்லை. அதனால் பையனைத் தனியாக சந்தித்துப் பேசிப் பார்ப்பது என்று முடிவு செய்தேன். கல்யாணியைக் கூப்பிட்டனுப்பியதைப் போல் அவனை வரவழைக்க முடியாது. அவன் வீட்டுக்கே ஒரு தடவை ஜாதகத்துடன் போனதிலிருந்து அலுவலகக் காம்பவுண்டிலோ, காண்டினிலோ கண்ணில் பட்டால்கூடப் பையன் என் பார்வையிலிருந்து நழுவுவது தெரிந்தது.

ஒரு நாள் மாலை வீட்டுக்குத் திரும்பும் போது அவன் தனியாக அகப்பட்டுக் கொண்டான். அவன் வேலைகளைப் பற்றி விசாரித்து விட்டு, ''இப்படி பீச் வழியாகப் போகலாமே?'' என்று அழைத்தேன். இருவரும் நடந்து கடற்கரை மணலில் போய் அமர்ந்தோம். பாவம், எந்தப் பெண்ணுடன் அன்று சினிமாவுக்குப் போகத் திட்டமோ, பையன் ஒரு நிலையில் நிற்காமல் தவித்தான்.

எதைப் பற்றியெல்லாமோ பேசிவிட்டு விஷயத்துக்கு வந்தேன். ''உன்னிடம் ஒரு சமாசாரம் கேட்க வேண்டும். அதற்காகத் தான் தனியாக அழைத்துக் கொண்டு வந்தேன். நீ ஒன்றும் கலவரப்பட வேண்டாம். 1970ல் நீ எதைச் செய்கிறாயோ, அதை 1950லேயே நான் செய்தவன். அதனால் நீ செய்வது தவறு என்ற நோக்கத்துடன் நான் பார்க்கவில்லை....'' என்று பேச்சுக்கு அஸ்திவாரம் அமைத்தேன்.

பையன் குமைத்துப்போய் என் முகத்தைப் பார்த்தான். '' நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

'' இது ஒன்றும் அப்படிப் பெரிய விஷயம் இல்லை. இருநூறு பெண்களுக்கு மேல் வேலை பார்க்கும் இடத்தில் நாலைந்து கேசுகள் இப்படி இருப்பதும் சகஜம்தான். எதுவுமே தப்பு, பெண்களுடனே பேசுவதே தவறு என்கிற பழைய காலத்தவன் அல்ல நான்...

''சமீபத்தில் நீ உன் ஆபீசில் வேலை பார்க்கும் பெண் ஒருத்தியுடன் அதிகமாகப் பேசிக் கொண்டிருக்கிறாய் என்று கேள்விப்பட்டேன். சினிமாவுக்கெல்லாம் கூடப் போவதாகத் தெரிந்தது. நான்தான் சொல்லி விட்டேனே, அது தப்பு என்று நான் கொஞ்சம்கூட நினைக்கவில்லை. மேலே என்ன செய்யலாம், கல்யாணம் என்று தொடரலாமா...?'' என்று தயங்கினேன்.

பையனும் தயங்கினான். அவன் கைகள் மண்ணில் அளைந்தன. சிறிது நேர மௌனத்துக்குப் பிறகு சொன்னான். ''நான் ஒரு பெண்ணுடன் அதிகப்படியாகப் பேசுவது உண்மை. என் சுபாவமே கொஞ்சம் கலகலப்பான சுபாவம். அவ்வளவுதான். அவளும் 'ப்ரீ'யாகப் பழகுகிறவளாக இருந்தாள். அதனால் மற்ற எல்லாரையும்விடக் கொஞ்சம் அதிகமாக நான் அவளுடன் பேசுவேன். இரண்டொரு முறை சினிமாவுக்கும் போனது உண்டு. ஆனால் கல்யாணம் என்பது வரை நாங்கள் பேசிக்கொள்ள வில்லையே... உங்களுக்கு யார் சொன்னது....?'' என்று என்னிடம் எதிர்க்கேள்வி போட்டான் அவன்.

''நீங்களாகப் பெரிய விஷயங்களைப் பற்றி எல்லாம் பேசி முடிவெடுக்கலாமா...? அதற்

# மணமகிழும் காலைப் புத்துணர்வு மணிக்கணக்கில் நிலைத்திருக்க...




குளித்த பிறகு பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்! பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்கின் நீங்காத நறுமணம்... ஈரத்தை இழுக்கும் தன்மை... நாள் முழுவதும் காலைப் புத்துணர்வின் சுகம். இவை யாவரையும் உங்களிடம் ஈர்க்கும்.

கோடையானாலும் இருக்க மானாலும் நறுமணத்துடன் புதுமைப் பொலிவில், குளுமை உணர்வில் உங்களை திகழ வைக்கும் எக்காலத்துக்கும் ஏற்ற பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க் இந்தியாவிலேயே அதிக விற்பனையாகும் டால்க்.

மூன்று அளவுகளில் கிடைக்கிறது. ஃபாமிலி, பெரியது, மத்திமம்.

## பாண்ட்ஸ்

### *ட்ரீம்ஃப்ளவர் டால்க்*

**சொகுசான சுகமளிக்கும் மிருதுவான டால்க்**

*சீஸ்ப்ரோ பாண்ட்ஸ் இன்கார்பொரேடெட்*

(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் [illegible] இணைக்கப்பட்டது)

குத்தான் நான் கேட்கிறேன். அந்தப் பெண் எனக்குக் கொஞ்சம் தெரிந்தவள்'' என்றேன்.

''அப்படியா...? அவளுடன் பழக வேண்டாம் என்று நீங்கள் சொன்னால் நானாக வலியப் போய்ப் பழகப் போவதில்லை'' என்று அமைதியாகச் சொன்னான். எனக்கு அந்தக் கணம் சினிமாத் தியேட்டரில் அவன் நடந்து கொண்டது நினைவுக்கு வந்தது.

''நல்ல பெண்தான், இல்லை என்று சொல்ல வில்லை. எவ்வளவோ தடவை ஹோட்டலுக்குக்கூட அழைத்துக் கொண்டு போயிருக்கிறேன். பாவம், ஏழைப் பெண். அதனால் என் செலவில் சினிமாவுக்கும் இரண்டு மூன்று தடவை போயிருக்கிறேன். அவ்வளவுதான். கல்யாணம் கில்யாணம் என்று அவளும் கேட்டதில்லை, நானும் பேசின தில்லை'' என்று மீண்டும் அவனே மிக அமைதியாகச் சொன்னான். என்ன துணிச்சல், என்ன தைரியம், என்ன நெஞ்சழுத்தம் !

ஓர் ஆணுக்கு ஒரு பெண் மீது ஏற்படும் அனுதாபம் அவளை எங்கே கொண்டு போய் விடும் என்று தெரிந்திருந்ததால் எனக்கு அந்தக் கணம் ஆத்திரமாக வந்தது. பற்களைக் கடித்துக் கொண்டேன்.

''அவளை எத்தனை தடவை சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போயிருக்கிறாய்...?'' என்று கேட்டேன்.

என் குரலில் தெரிந்த கடுகடுப்பை அவன் புரிந்து கொண்டான்; சிலிர்த்தெழுந்தான். திடீரென்று அவன் பேச்சு ஆங்கிலத்துக்கு மாறியது. ''ஆமாம், ஐந்தாறு தடவை போயிருக்கிறேன். போயிருந்தால் என்ன ? அதற்காக இப்பொழுது என்னை எந்தக் கழுவில் ஏற்ற வேண்டும் என்று சொல் கிறீர்கள்...?'' என்று மிகுந்த ஆத்திரத்துடன் கேட்டான்.

நிலைமையைச் சமாளிக்க நான் சாந்தமானேன். ''கோபப்படாதே... நான்தான் முதலிலேயே சொல்லிவிட்டேன், இதில் தப்பாக நான் எதுவும் நினைக்கவில்லை என்று. பார்க்கப் போனால், நானும் அந்த வகையில் தயாரானவன்தான்....'' என்று சிரித்தேன்.

''இருக்கலாம். ஆனால் என் அநுபவம் உங்களுடையதைப் போல்தான் இருக்க வேண்டும் என்று கட்டாயம் ஒன்றும் இல்லை....'' என்றான்.

''அந்தப் பெண்ணைப் பார்த்துப் பரிதாபப் பட்டு, 'ஐயோ பாவம், ஏழைப் பெண், சினிமா பார்க்கக் காசு இருக்காதே' என்ற பரிதாப உணர்ச்சியினால்தான் அவளைச் சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போனாயா....?''

பையன் முறைத்துக் கொண்டான். ''என் சொந்த விஷயத்தைப் பற்றி ஒரு மூன்றும் மனிதருடன் நான் பேசத் தயாராக இல்லை'' என்றான்.

''உனக்கு நான் மூன்றும் மனிதன். ஆனால் அந்தப் பெண்ணுக்கு வேண்டியவன். அதனால்தான் கேட்கிறேன்.....''

''அப்படி அந்தப் பெண்ணை அழைத்துக் கொண்டு போவது உங்களுக்குப் பிடிக்க வில்லை என்றால் இனிமேல் போகவில்லை. போதுமா ? ஆளை விடுங்கள், நான் போக வேண்டும்'' என்றான்.

''அவ்வளவு இலேசாக இந்தப் பிச் சணை உதறிவிட்டுப் போவதைப் போல் உதறிவிடுகிற சமாசாரம் இல்லையப்பா இந்த விஷயம். கொஞ்சம் உட்கார்...'' என்றேன். உட்கார்ந்தான்.

''பதற்றப்படாமல் நிதானமாகச் சொல். நீ அவளுடன் ஐந்தாறு தடவை சினிமாவுக்கும் எத்தனையோ தடவை ஹோட்டலுக்கும் போயிருக்கிறாய். கிட்டத்தட்ட ஒரு வருஷத்துக்கும் மேலாகப் பேசிப் பழகியிருக்கிறாய். இல்லையா ?''

''ஆமாம்....''

''சரி... அவளை உனக்குப் பிடித்திருப்பதால்தானே ஒரு வருஷமாகப் பழகுகிறாய் ? அவளைக் கல்யாணம் செய்து கொள்கிறாயா?''

பையன் என் முகத்தைக் கூர்ந்து நோக்கினான். ''நீங்கள் அந்தப் பெண்ணுக்கு என்ன உறவு ?'' என்று கேட்டான்.

''அண்ணா என்று வைத்துக் கொள்ளேன்...''

''அண்ணா என்று வைத்துக் கொள்வதாக இருந்தால் இதையும் இப்படி வைத்துக் கொள்ளுங்கள். நான் அந்தப் பெண்ணுடன் பழகியது உண்மை. இல்லை என்று சொல்லவில்லை. ஆனால் கல்யாணம் என்ற வகையில் நானும் நினைத்துப் பார்க்கவில்லை. அவளும் அதைப் பற்றி என்னிடம் கேட்டதில்லை. இத்துடன் விட்டு விடுங்கள். மேற்கொண்டு ஏதாவது கேட்க வேண்டுமானால் அவளே என்னிடம் கேட்கட்டும். சொல்லிக் கொள்கிறேன். உங்களிடம் சொல்ல வேண்டும் என்று எனக்குக் கட்டாயம் இல்லை. வருகிறேன்'' என்று ஆங்கிலத்தில் பொழிந்துவிட்டு வேகமாக எழுந்தான்.

## அமராவதி ஆலயப் பணி

கும்பகோணம் - மன்னார்குடி மார்க்கத்தில் பாபநாசம் தாலுகாவில் அமைந்திருக்கும் இரும் அமராவதி கிராமத்தில் உள்ள ஸ்ரீ விசாலாக்ஷி அம்பாள் சமேத ஸ்ரீ விசுவநாத ஸ்வாமி கோயிலில் ஜீர்ணோத்தாரணத் திருப்பணி நடந்து வருகிறது. உத்தம புருஷர்களாகிய திவான் ஸர் ஏ. சேஷய்யா சாஸ்திரிகள் கட்டிய இவ்வாலயப் பணிக்கு ஸ்ரீ காஞ்சி ஆசாரியாள் ஆசி நல்கி யுள்ளார்கள். ஆஸ்திக அன்பர்கள் கீழ்க்காணும் முகவரிக்குத் தங்களால் இயன்ற திரவிய சகாயம் அனுப்பக் கோருகிறோம்: ஸ்ரீ ஏ. ஆர். சேஷய்யா சாஸ்திரி, மூன்னாள் காமகோடி மட சர்வாதிகாரி, 'மௌனத் கல்யா', கலியாணராமய்யர் தெரு, கும்பகோணம்.



டச்சு விவசாய இலாகா 'மந்திரி'க்கு அண்மையில் ஒரு பெரிய பார்சல் வந்தது. அதைத் தொடர்ந்து சிறு சிறு பார்சல்களாகத் தினமும் வரலாயிற்று. உள்ளே பிரித்துப் பார்த்தால் எல்லாம் காலிப் 'பர்ஸ்'கள். ஃப்ரீஸ்டேலண்ட் மாகாணத்தவர் அரசாங்கத்தின் விவசாய வரிக் கொள்கையை எதிர்த்து அனுப்பிய பர்ஸ்களே அவை!

நியூ டைமிங் - ''தேதி''

---

நானும் எழுந்தேன். ''இதோ பார் அப்பா. நீ அவனுடன் சுற்றியது நாலு பேருக்குத் தெரிந்து போய் விட்டது. அவளுக்கு வேறு இடத்தில் கல்யாணம் என்று பார்க்கும் போது இந்தச் சமாசாரம் அவர்கள் காதில் விழுந்தால் அது அவள் வாழ்க்கையை எப்படிப் பாதிக்கும் என்று உனக்குத் தெரிந்திருக்கும்......''

''எனக்குத் தெரிந்து என்ன ஆகவேண்டும்? அது அவளுக்குத் தெரிந்திருக்க வேண்டும்.''

என்னையே சவுக்கால் அடித்தது போல் இருந்தது. அவன் சொன்னது அப்படியே உண்மை.

அவன் எழுந்து நடந்தான். நடை பாதை தாண்டி நாலு அடி போனதும் எதிர்ப்புறத்தில் வந்த டாக்சியைக் கையைக் காட்டி நிறுத்திக் கண் மூடித் திறக்கும் நேரத்தில் சாலையைக் கடந்து அதனுள் பாய்ந்து ஏறிப் போய் விட்டான் அவன். நான் பிரமை பிடித்து அப்படியே நின்றேன். கடைசியாக அவன் சொல்லி விட்டுப் போன வார்த்தை— ''அவள் வாழ்க்கை பாதிக்கப்படும் விஷயம் எனக்குத் தெரிந்து என்ன ஆக வேண்டும்? அது அவளுக்குத் தெரிந்திருக்க வேண்டும்''— அப்படியே பொய்யில் அறைந்தது போல் இருந்தது. சில நிமிஷ நேரம் வேறு எதுவும் நினைத்துப் பார்க்க முடியவில்லை. மெதுவாக வீட்டை நோக்கி நடந்தேன்.

**வீ**ட்டை அடைந்து, உடை மாற்றிக் கொண்டு கை கால் கழுவிக் கொண்டு சாப்பிட்டு எழுந்து முன் அறைக்கு வரும் வரை சங்கரியுடன் எதுவும் பேசவில்லை. அவளும் எதுவும் கேட்கவில்லை. உள்ளே வேலைகளை முடித்துக் கொண்டு அவள் வந்தவுடன் பையனைப் பார்த்ததிலிருந்து கடைசியில் அவன் சொல்லி விட்டுப் போன அந்த வார்த்தைகள்வரை அப்படியே சொல்லி முடித்தேன். சங்கரிக்கு ஆத்திரமும் எரிச்சலும் படபடப்பாக வந்தன. அப்படியே கேட்டுக் கொண்டிருந்தவள் கடைசியாகக் கேட்டாள். ''ஆண்டவரே எப்படியோ தெரியட்டும். கல்யாணியை மறுபடியும் இங்கே வரச் சொல்லுங்கள்; பையனைப் பற்றி நமக்குத் தெரிந்தது முழுவதையும் சொல்லி, இத்துடன் இந்த மாதிரி நடவடிக்கைகளை நிறுத்திக் கொள்ளும்படி சொல்லுவோம். அதையும் மீறி அவள் போனால் பிறகு அது அவள் தலையெழுத்து...'' என்று பெருமூச்சுவிட்டாள்.

''ஆமாம், கல்யாணி இப்படி ஒருத்தனுடன் சினிமாவுக்கு ஏன் போனாள் தெரியுமா?'' என் மனம் உள்ளச்சலைப் பற்றி ஏதாவது பேச வேண்டும் என்று இருந்தது.

''அவன் அழைத்தான். 'ஐயோ, பாவம், ஏழைப் பெண்ணாக இருக்கிறாளே, சினிமாவுக்குப் போகக் கையில் காசு இருக்குமோ என்னவோ' — என்ற அந்தரங்கமான அனுதாபத்தில் அவன் அழைத்தான். இவள் போனாள்.''

''அது இல்லை அவள் போன காரணம். அவளுக்கு அப்படி ஓர் ஆண்பிள்ளையுடன் போகத் தைரியம் கொடுத்தது எது தெரியுமா....?''

''படிப்பு.... படிச்சிருக்கிறோம் என்கிற மமதை! வேலை பார்க்கிறோம் என்கிற தைரியம்!''

''அதெல்லாம் இல்லை. ஆழ்ந்து பார்த்தால் இதற்கெல்லாம் அடிப்படையான காரணம் என்ன? அவளைச் சொல்லித்தான் என்ன பிரயோசனம்...? இருபத்திமூணு வயதாகிறது அவளுக்கு. அவளுக்கும் மனசு என்று ஒன்று இருக்கும், உணர்ச்சி என்று இருக்கும்.. ஜடம் இல்லை, அவள்....''

''அதற்காக...? கண்டவனுடன் சுற்ற வேண்டுமா? அதற்குப் பெயர் உணர்ச்சியா? அப்படிப் போகாதவர்கள் ஜடங்களா?''

''அப்படியும் இல்லை. இப்படி இருபத்திமூன்று வயதுப் பெண் வீட்டுப் படியைத் தாண்டி யாரோ ஒருத்தனுடன் ஏன் சினிமாவுக்கும் பீச்சுக்கும் அலைய வேண்டும்? இந்த வயசில் அவள் எப்படி இருக்க வேண்டும்? ஏன் அப்படி இல்லை? அதற்கு என்ன, யார் காரணம்? அந்த அம்மாள் கேட்டாளே, வைரத்தோடும், பதினைந்து பவுனும், பந்தல் நிறைக்கக் கல்யாணமும்... அதுதான் இன்றைக்கு நம் சமூகத்தைச் சேர்ந்த பெண்கள் இப்படி நடுத்தெருவுக்கு வந்து சீரழியக் காரணம்! வேறு என்ன? கண் முன்னால் தெரிகிறது, அந்தப் பையன் பண்ணினதும் கல்யாணி பண்ணினதும் தப்பு என்று. நேரில் முடியாவிட்டாலும் தள்ளிப் போய் நின்று காறித் துப்புகிறோம். அவர்களை அப்படித் தெருவில் அலையவிட்டவர்களை என்ன செய்வது? வைரத்தோட்டுக்கும் பதினைந்து பவுனுக்கும் வக்கு இருந்தால் இன்றைக்குக் கல்யாணி சினிமா இருட்டில் யாரோ ஒருத்தன் தன் மடியில் விழுவதைப் பொறுத்துக் கொண்டிருக்கக் கூடிய நிலை வருமா? ஒரு கல்யாணி இல்லை, நமக்குத் தெரிந்தது ஒரு கல்யாணி. இன்னும் எத்தனை எத்தனை கல்யாணிகள் இன்றைக்கு அந்த நிலையில் இருக்கிறார்கள் தெரியுமா? வைரத்தோட்டுக்கும் பவுனுக்கும் மதிப்பு இருக்கும் வரை கல்யாணிகள் இருந்து கொண்டுதான் இருப்பார்கள். அதுவரை அந்த மாதிரிப் பையன்களுக்கும் வேட்டைதான். அனுபவித்துவிட்டு மாங்கொட்டையைத் துப்புவதைப் போல் துப்பிவிடுவார்கள்....! உம்?.. ஆண்டவனே...!''

# வெல்டிங் ஒரு மூன்றெழுத்து வார்த்தை

*அதற்கும் சிறிது விளக்கம் தேவை*

அந்த மூன்று எழுத்துக்கள் ஐஓஎல் என்பது தெளிவு. ஏனெனில் ஐஓஎல் (இந்தியன் ஆக்ஸிஜன் லிமிடெட்) வெல்டிங் தொழில் நுட்பத்தில் முன்னேற்றத்துக்கு எப்போதும் முன்னோடியாக இருந்து, இந்த நாட்டில் புதிய வெல்டிங் உத்திகளை புகுத்தியுள்ளது. அதே சமயத்தில் ஐஓஎல் நம் நாட்டிலேயே பலவகை வெல்டிங் சாதனங்களையும் அதற்குச் சம்பந்தமுள்ள வேறு பொருள்களையும் செய்துள்ளதோடு வேறு எங்கும் உள்ள சிறந்த தொழில் நுட்ப வாதிகளுக்குச் சமமான வெல்டிங் தொழில் நுட்பவாதிகள் பலரையும் பயிற்றுவித்துள்ளது.

இன்று நாட்டின் ஒவ்வொரு பெரிய தொழில் பிரதேசத்திலும் 60-க்கும் அதிகமான தொழிற் கூடங்கள், அலுவலகங்கள், டிப்போக்கள், கம்பிரஸிங் நிலையங்களை நிறுவி செயல்பட்டு வருகிறது. ஒரு விரிவான விநியோகிப்புப் பணியையும் அது செய்து வருகிறது. வெல்டிங் சம்பந்தமாக எழக்கூடிய எந்த ஒரு பிரச்னையையும் தீர்த்துவைக்க இந்தியா முழுதும் ஐஓஎல் தொழில் நுட்ப நிபுணர்களும், சர்வீஸ் இன்ஜினீயர்களும் பணியாற்றுகின்றனர்.

**வெல்டிங் துறையில் முதல்வர்கள்!**

**IOL**

# CENTURY RAYON makes YOUR HOME



# A SWEETER HOME!

Century Rayon provides furnishings—rich and glowing, or sober and subdued; in staid, traditional designs as well as in madly modern designs; curtains, upholstery material, bed-sheets, pillow-covers...for your family a rich assortment of Cenray fabrics—sarees, dress materials, suitings, shirtings...better in texture, better in colours and designs than any other available fabrics.

Cenray, a Division of Century Rayon, continuously devotes itself to the development of new designs, new mixings, new blends, to promote and popularise the use of rayon. It provides technical counsel and marketing facilities to manufacturers of rayon fabrics who adhere to the exacting standards laid down by Century Rayon's Research and Consumer Service Section. Century Rayon, in short, helps make life not only colourful and comfortable, but also much more exciting!




**CENTURY RAYON,**
Industry House,
159, Churchgate Reclamation,
Bombay 20.

SAS-CRB

## சாப்பாட்டுராமன் சொல்லும் விருந்துக் கதை-1



சிக்கந்தர் லோடி என்று ஓர் அரசர் இருந்தார். சாப்பாட்டு விஷயத்தில் அவருக்கு, தாம் மற்ற சாதாரண மனிதர்களைவிட உயர்ந்தவர் என்று எண்ணம். மற்றவர்களுடன் சேர்ந்து சாப்பிடமாட்டார். அதற்காக அவர் பல பிரமுகர்களை விருந்துக்கு அழைக்காமல் இருப்பதில்லை.

எல்லோருக்கும் விருந்து பரிமாறப்பட்டதும், அரசர் மற்றவர்களைச் சாப்பிடச் சொல்லாமல் தாம் மாத்திரம் சாப்பிடுவார். மற்றவர்கள் சிலைகளாக அமர்ந்திருப்பார்கள். தாம் சாப்பிட்டு முடித்ததும், மற்றவர்களைப் பார்த்து, ''சாப்பாடு பிரமாதம்! நீங்கள் இந்த உணவு வகைகளை உங்கள் வீடுகளுக்கு எடுத்துச் சென்று [சாவகாசமாகச் சாப்பிடலாம்'' என்பார்.

□ □ □ □ □ □ □ □ □

## வங்கமும் தங்கமும்

மேற்கு வங்காளத்தில் ஜனாதிபதி ஆட்சி வந்ததை விரும்பாதவர்கள் கம்யூனிஸ்டுகள் மாத்திரமல்ல! ரோல்டு கோல்டு நகை வியாபாரிகளும் கூடத்தான்! மாநிலத்தில் நிலவிய அராஜகச் செயல்களுக்குப் பயந்த பெண்மணிகள் தங்கள் தங்க நகைகளைப் பத்திரப் படுத்திவிட்டு, கில்டு நகைகளை ஏராளமாக வாங்கி அணிந்து கொண்டார்கள். ஜனாதிபதி ஆட்சி வந்த பிறகு மீண்டும் தங்க நகைகளை அணிய ஆரம்பித்து விட்டார்கள். கில்ட் வியாபாரம் படுத்துவிட்டது.

□ □ □ □ □ □ □ □ □

## சொல்லும் பல்லும்



மெக்ஸிகோ நகரில் உலகக் கால்பந்து போட்டி நடந்தது. இத்தாலி நாட்டைச் சேர்ந்த ரஃபேல் வியூலி என்பவர், இத்தாலிக்கும் மேற்கு ஜெர்மனிக்கும் நடக்கவிருக்கும் பந்தயத்தில் மேற்கு ஜெர்மனிதான் ஜெயிக்குமென்றும், அப்படி மேற்கு ஜெர்மனி தோற்றால், எத்தனை கோல்களில் தோற்கின்றதோ அத்தனை பற்களைத் தாம் பிடுங்கிக் கொள்வதாகவும் ஒரு நண்பரிடம் சவால் விட்டார். பந்தயத்தில் இத்தாலி நாலு கோல் போட்டு மேற்கு ஜெர்மனியைத் தோற்கடித்தது. உடனே வியூலி ஒரு பல் டாக்டரிடம் போய் நான்கு பற்களைப் பிடுங்கிக் கொண்டார்.



## பட்டு மாமா
## சிட்டு மாமி

**பட்டு மாமா:** என் ஃப்ரெண்ட் ராஜாராம் இருக்கானே அவன் என்ன பண்ணினான், தெரியுமா? சறுக்கி விழுந்தாலும் மீசையிலே மண் ஒட்டலே என்கிற கதையா ....

**சிட்டு மாமி:** எதுக்கு அந்தப் பழமொழியெல்லாம்? ''தினேஷ் சிங் கதையா''ன்னு சொல்லிட்டுப் போங்களேன்!




கோமதி சுவாமிநாதன்



## சாப்பாட்டுராமன் சொல்லும் விருந்துக் கதை-2

குஜராத்திய மாநிலத்தின் ஒரு பகுதியில் ஒரு சுல்தான் இருந்தார். பரம சாப்பாட்டு ரசிகர். அவருடைய வழக்கமான காலை ஆகாரம் ஒரு பெரிய குவளையில் தேன், மற்றொரு பெரிய குவளையில் வெண்ணெய். இதைத் தவிர நூறிலிருந்து சுமார் நூற்றைம்பது வாழைப்பழங்கள். அவரை எப்போது சந்தித்தாலும் அவர் எதையாவது மென்று கொண்டிருப்பார்.

இரவில் அவர் படுக்கையில் சாய்ந்து தூங்க ஆரம்பித்தவுடன், கட்டிலின் இரு பக்கங்களிலும் வேலைக்காரர்கள் விதம் விதமான உணவு வகைகளுடன் தயாராக நின்று கொண்டிருப்பார்கள். சுல்தான் எந்தப் பக்கம் பார்த்தவாறு கண் விழிக்கிறாரோ உடனே அந்தப் பக்கம் இருக்கும் அவருடைய வேலைக்காரர்கள் உணவு படைக்க ஆரம்பித்து விடுவார்கள். மூகம்மத் பைகார் என்ற அந்தச் சுல்தான் சாப்பாட்டு விஷயத்தில் ஒரு சரித்திர புருஷராகவே இருந்தார்!



## போகுமிடம் வெகு தூரமில்லை

செட்டிநாட்டைச் சேர்ந்த நகரத்தார்களிடம் வெகு நாட்களாகவே ஒரு வழக்கம் உண்டு. அவர்கள் எதை எழுதினாலும் ஆரம்பத்தில் பிள்ளையார் சுழி போட்டு 'சிவமயம்' என்று எழுதிப் பிறகுதான் மற்ற விஷயங்களை எழுத ஆரம்பிப்பார்கள்.

ஒருசமயம் சிவப்பழம் போல் திருநீறணிந்து கொண்டிருந்த முதியவரைப் பார்த்து அவருக்கு அறிமுகமானவர் ஒருவர் "ஏது! ஒரே சிவமயமாகச் சென்றுகொண்டிருக்கிறீர்களே?" என்று கேட்க, அவர் பக்கத்திலுள்ள பிள்ளையார் கோயிலைச் சுட்டிக் காண்பித்து 'சிவமயம் பிள்ளையார் சுழியை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது' என்று நடைமுறை வழக்கத்தை நினைவுபடுத்திப் பதில் சொன்னார்.

□ □ □ □ □ □ □ □ □ □ □

## பிரவேசமும் ஓட்டமும்



மகாராஷ்டிர மாநிலத்தில் உள்ள ஓர் ஊரில் புதிதாக வீடு கட்டி அமர்க்களமாக ஒருவர் கிரகப்பிரவேசம் நடத்தினார். வந்திருந்த விருந்தினர்களில் பலர் அன்றிரவு அங்கேயே தங்கினர். அதே இரவில் பெய்த பலத்த மழையால் அந்த வீடு இடிந்து விழவே பலருக்குக் காயம் ஏற்பட்டது. - செய்தி

'குயவனுக்குப் பல நாள் வேலை; தடிக்காரனுக்கு ஒரு நாழி வேலை' என்ற பழமொழிக்கு இதைவிடச் சிறந்த உதாரணம் எங்கே கிடைக்கும்?

□ □ □ □ □ □ □ □ □ □ □

## அரசப் பிரியா



மைசூர் அரசர் முன்னிலையில் பிரபல நாதஸ்வர வித்வான் மதுரை பொன்னுசாமி பிள்ளை நாதஸ்வரம் வாசித்துக் கொண்டிருந்தார். வித்வான் 'ஷண்முகப்பிரியா ராகத்தை ஆலாபனை செய்து 'வள்ளி நாயகனே' என்ற கீர்த்தனத்தை வாசித்தார்.

அரசர் அந்தக் கீர்த்தனை அமைப்பில் மனத்தைப் பறி கொடுத்தார். நாதஸ்வர வித்வானிடம் அந்தக் கீர்த்தனையை வாய்ப்பாட்டாகப் பாடிக் காண்பிக்க முடியுமா என்று கேட்டார். பொன்னுசாமி பிள்ளையும் பாடிக் காண்பித்தார்.

"இந்தக் கீர்த்தனையின் சாகித்யகர்த்தா யார்?" என்ற கேள்வி எழுந்தது. நாதஸ்வர வித்வான் இயற்றியவரின் பெயரைச் சொல்லி, அவர் ஒரு சிறந்த பாடகர் என்றும் சொன்னார். அரசருக்கு அந்த வித்வானின் சங்கீதத்தை ரசிக்க வேண்டுமென்ற ஆவல் தோன்றியது. சந்தர்ப்பம் கிடைத்தபோது அந்த சாகித்யகர்த்தாவை வரவழைத்துப் பாடச் சொல்லிக் கேட்டார். அதோடு நிற்கவில்லை. அவருக்கு 'காயக சிகாமணி' என்ற விருதையும் வழங்கினார். ஏராளமான சன்மானமும் கூடக் கொடுத்தார்.

நம் ஷண்முகப்பிரியா மூலம் அரசப் பிரியரானவர்தான் ஹரிகேசநல்லூர் முத்தையா 'பாகவதர்'!



"ஏண்டாப்பா, தாமு! எப்போது இந்த வீட்டுக்கு மருமகள் வரப்போகிறாள்?" என்றவாறே என் எதிரில் தட்டுக்குப் பக்கத்தில் உட்கார்ந்தவாறே எனக்குப் பக்கத்தில் பரிமாறினாள் அம்மா.

அவள் நின்று கொண்டு சுறுசுறுப்பாக நடமாடியவாறே எங்களுக்கெல்லாம் பரிமாறிய நாட்கள் என்றோ மறைந்து விட்டன. வயதாகாமலேயே வயோதிகக் களைப்பு வந்து விட்டது, நோயின் பிடிப்பால்.

நான் ரசம் சாதத்தைப் பிசைந்தவாறே அவள் முகத்தைப் பார்த்தேன்.

"நேத்திக்குப் பிஞ்சு வெண்டைக் காயும், வாழைக்காயும் வாங்கி வைச்சேன். ஆனால் காலையிலே எழுந்திருச்சா உடம்பே ஆகலே. அப்படியே வச்சுட்டு ரசத்தை வச்சுட்டேன்."

"பரவாயில்லேம்மா! ஏதோ ஒன்றை முடிந்தவரை செய்து..."

"எத்தனை நாளடா இப்படியே ரசம் சாதமும், மோர் சாதமும் சாப்பிட்டுண்டே இருக்கிறது? எனக்கும் இதைப் பண்ணறதே பெரும் பிரயாசையாயிடறது! நான் எதுக்கு இத்தனை சொல்றேன்னு புரியலியா?" என்று நிறுத்தினாள் அம்மா.

"என்ன நினைக்கிறே? சொல்லும்மா!"

"மேலத் தெரு அகிலாண்டம் நேத்திக்குக் கூட வந்திருந்தார். அவர் பெண் சகுந்தலாவைப் பண்ணிக்கும்படி நடையா நடக்கிறார்!"

"அவள் கட்டுப்பெட்டியாக இருப்பாளே..." என்று எதையோ மனத்துள் கொண்டு குறை கூறினேன் நான்.

"அடக்க ஒடுக்கமான பெண்ணுடா! காரியமெல்லாம் கச்சிதமா செய்வாள்" என்று சமாதானம் கூறுகிறாள் அம்மா. அவளுக்கு அந்தப் பெண்ணைப் பிடித்து விட்டது.

நான் பேசாமல் சாப்பிடுவதில் ஈடுபட்டேன்.

என் மௌனம் அம்மாவுக்குப் பயத்தைத் தந்துவிட்டது போலும். மெல்லிய குரலில் என்னைச் சமாதானமாகத் தன் 'வழிக்கு இழுக்கும் இதத்தோடு, "இல்லே, உனக்கு வேறு எந்தப் பெண்ணையாவது பிடிச்சிருந்தால் சொல்லேன்" என்றாள். இப்படிக் கூறும் போதே 'வேறு எந்தப் பெண்ணையும் உனக்

# இரட்டை முகம்

கோமகள்

குப் பிடித்திருக்காதே" என்ற உறுதி அவள் குரலில் தெரிந்தது.

''பார்க்கலாம், அம்மா !''

''என்னடா, இன்னும் பார்க்கறது? எனக்கும் தள்ளவில்லே. 'ஒரு வாரத்திலே பதில் சொல்லுங்கள்' என்கிறார் அகிலாண்டம். யோசிச்சுப் பாரு, என் முடிவுக்கே வருவே.''

அப்பாவும் படுத்த நிலையிலேயே எங்கள் பேச்சுக்களைச் செவிமடுக்கிறார் என்பதற்கு அடையாளமாக, ''அட சட்! அவனை விட்டு விடு. யோசிச்சுச் சொல்றேன். விவரம் தெரியாத பிள்ளை மாதிரி அவன்கிட்டே தொண தொணக்கிறியே..... டேய், நாமு! மிஸ்டர் அகிலாண்டம் தம் பெண்ணுக்கு எல்லா நகை நட்டுக்களும் போட்டுக் கையிலே மூவாயிரம் பணமும் தரதாச் சொல்றார். உனக்கு ஒரு ஸ்கூட்டரும் வாங்கித் தரேன்னாராம். அது தான் உங்கம்மாவுக்குச் சபலம் !'' என்றார்.

அந்தச் சபலத்தை அவரும் ஏற்று எனக்கும் ஊட்ட முயல்கிறாரோ என்ற சம்சயத்தோடு எழுந்த நான், ''எனக்கு யோசிக்க அவகாசம் கொடுங்கப்பா !'' என்றேன்.

மற்ற தாய் தகப்பன் தங்கள் பிள்ளை இப்படிச் சொல்லி விட்டால் சலித்துக்கொள்வார்களோ என்னவோ, என் பெற்றோர் விஷயத்தைப் போட்டாயிற்று, பொறுப்புடன் பதில் கூறுவான் என்று விட்டு விட்டனர்.

அலுவலகத்துக்குப் புறப்பட்டேன். அந்த வேளையில் நான் ஏறும் பஸ்ஸிலேயே எனக்கு அடுத்த மூன்றாவது நிறுத்தத்தில் வழக்கமாக ஏறி வரும் நளினியின் நினைவு என்னைச் சூழ்ந்து கொண்டது. அவள்தான் என்ன அழகு ! கொடுக்கும் வேலைகளை நன்றாகச் செய்வதில் காட்டும் சுறுசுறுப்பு. திருத்தங்களைக் கூறும் போது தன் புத்திசாலித்தனம் தெரிய விளங்கிக் கொள்ளும் சுபாவம். வேலி நாகரிகமாகப் பழகும் தன்மை. ஆசைகளின் ஆடம்பரம் இழையோடும், சம்பாதிக்கும் ஆர்வம் தொனிக்கும், கலகலப்பும் பேச்சும், சிரிப்பும்... அவளை அவனுக்கு மிகவும் பிடித்துப் போனதற்கு, இத்தனைக்கு மேலும் ஒரு காரணம் உண்டு. அது அவளது இரக்க மனம் !

எங்கள் அலுவலகத்தில் வேலை செய்து வந்த மிஸ்டர் கமலசேகரன் சட்டென்று நோய்வாய்ப்பட்டு இறந்து போனார். மூன்று குழந்தைகளை வைத்துக் கொண்டு கமலசேகரனின் மனைவி கண்ணீர் வடித்துக் கதறிய காட்சி எங்கள் எல்லோரது நெஞ்சிலும் பரிதாபத்தைக் கிளறி விட்டது உண்மை. ஆனால் அந்த நிகழ்ச்சியை அவரவர் வாழ்க்கைப் பிரச்னையின் பளுவால் அன்றே நாங்கள் மறக்கத் தயாராகி விட்டோம்.

சில நாட்களுக்குப் பின் நளினி கையில் ஒரு நோட்டோடு என் இருப்பிடம் வந்தாள்.

''ஏதாவது சந்தேகமா நளினி?''

''இல்லே, சார் ! இறந்து போன நண்பர் குடும்பத்துக்கு நம்மாலான உதவி ஏதேனும் செய்யலாம்னு.... நோட்டைப் பாருங்களேன்........''

அதை நான் பார்வையிட்டேன்.

கல் நெஞ்சனான எங்கள் மானேஜர் இருபத்தைந்து ரூபாயும், சயாக் கஞ்சனான சூப்பரின்டெண்ட் இருபது ரூபாயும் போட்டிருந்தது என்னை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.

''இது எப்படிச் சாத்தியமாயிற்று ?''

''என் விடாமுயற்சி என்றுதான் சொல்ல வேண்டும்.''

'' ரொம்ப நல்ல தொண்டு !''

''நீங்கள் எத்தனை தரப் போகிறீர்கள், மிஸஸ் கமலசேகரனுக்காக....?''

''ஐந்துரூபாய் எழுதிக்கொள்ளுங்களேன்.''

''நோ, நோ. நீங்கள் பத்து ரூபாய் போடுங்கள்.''

மறுக்கவில்லை நான். என் நிலைக்கு அது அதிகமென்றாலும்கூட.

அடுத்தாற்போல் கிளார்க் ஞானமணியிடம் அவள் நோட்டை நீட்டினாள்.

'' நீ எவ்வளவு போட்டிருக்கிறாய்டி ! கலெக்ட் பண்ற உதவியே போதும்னு விட்டுட்டியா?''

''பாரேன், என் பெயரை !''

'' அட, கடவுளே ! இருபது ரூபாயா போட்டுட்டே. ? அப்புறம் மாதம் பூரா பட்ஜெட் துண்டு விழுமே... என்னடி பண்ணுவே?

நான்கூடத் திடுக்கிட்டேன். நளினி இருபது ரூபாய் தந்திருக்கிறாளா?

''என் மனசுலே இவ்வளவு தந்தாத்தான் திருப்தி ஏற்படும் போலே இருக்குடி ஞானம். நாம் எவ்வளவு சகாயம் பண்ணினாலும் மிஸஸ்

கமலசேகருக்குத் தன் புருஷன் இருந்து சம்பாதிக்கிறது போலாகுமா?''

அந்தக் கணமே அவள் பண்பை எண்ணி நிமிர்ந்தேன். என்னிலும் உயரமான இடத்தில் அவள் நிற்பதாகத் தோன்றியது எனக்கு. அவளது மாதுரியமான அழகில் கலந்திருந்த மிருது என்னைக் கவர்ந்தது. அந்த ஆடம்பர உருவத்துள் நிறைந்திருந்த அன்புள்ளம் தெற்றெனப் புலப்பட்டது. ஆ! நளினி தான் எத்தனை நல்லவள்! செயலின் சாதுரியங்களோடு இரங்கும் உள்ளமும் பெற்றிருக்கிறளே.....!

அதன்பின் நான் அவள் செயல்களைக் கவனிக்க ஆரம்பித்தேன். தேசப் பாதுகாப்பு நிதிக்கு அவள் தன் கழுத்தில் கிடந்த ஒற்றை வடச் சங்கிலியைத் தந்தபோது உண்மையிலேயே நான் அயர்ந்து போனேன். இந்த நிகழ்ச்சிக்குப் பின் அவளைப் பார்க்கும் போதும், மற்றவர்கள் புகழும் போதும் என்னுள் பெருமிதம் பொங்கியது. ஜவான்களுக்கு நிதி சேர்க்கும்போதும் அவள் தீவிரமாக முன்னின்று சேர்த்துத் தந்தாள். பஸ் ஸ்டாண்டில் தினமும், அநேகமாக ஓர் இரண்டு பைசாவாவது பிச்சைக்காரனுக்குப் போடாமல் இருக்க மாட்டாள்.

அடுக்கடுக்காய் மலரும் அரும்புகளாக என் எண்ணங்கள் சுவையேறிக் கொண்டிருந்தன. நெஞ்சப் புதைவில் ஆழ்ந்த ரகசியமாகப் பீறிட்டுக் கொண்டிருந்த அவள் நினைவை வெளிப்படுத்தத் தக்க சமயத்துக்குக் காத்திருந்தேன்.

ஒரு நாள் பஸ் ஸ்டாண்டில் காத்திருந்த போது வழக்கமாக ஏற வேண்டிய பஸ் நிற்காமல் போய் விட்டது.

''இன்னும் அரை மணி நேரமாகுமே....'' என்ருள் நளினி தன் கைக் கடிகாரத்தைப் பார்த்தவாறே.

''அதனால் என்ன? கொஞ்ச நேரம் உங்களோடு பேச வேண்டும் என்று நினைத்தேன், மிஸ் நளினி!''

நிமிர்ந்தவளின் எதேச்சையான பார்வையில் என்னைக் கண்டுகொண்ட விதம் புலப்பட்டது. அந்தத் தெளிவில் என் மனம் மலர்ந்தது.

''வெகுநாட்களாகச் சொல்ல ஒரு சந்தர்ப்பம் தேடினேன்.....''

நளினி பதில் பேசவில்லை. என் சொற்களை அவள் அர்ச்சனைப் பூக்களாய் ஏற்கும் பெருமிதம் தெரிந்தது.

''என்னை மிகவும் கவர்ந்தது உங்கள் இரக்க மனம்தான்!''

என் மனம் விட்டுப் பேசும் நிலையைக் கண்டதும் அதைத் தூண்டும் விதமாக, ''அப்படியா?'' என்ருள் அவள்.

''அதுதான் உண்மை! வெகுசிலருக்கே அபூர்வமாக அமைந்த வரப்பிரசாதம் இது!''

''ரொம்பப் புகழ்கிறீர்கள்!'' என்றவள், அந்தப் புகழின் போதையில் கட்டுண்ட லயிப்புத் தோன்றக் கூறினுள். எந்தப் பெண்ணுக்குத்தான் அவள் உணர்ச்சி பற்றிக் கூறுவதைக் கேட்டுப் பெருமைப்படாமல் இருக்க முடியும்?

''என் வாழ்வின் துணைக்கு, இத்தகு நல்ல அம்சங்கள் அமைந்த பெண்ணுக் கிடைத்தால்....'' என்று நான் நிறுத்திவிட்டேன்.

எனக்குச் சாதகமாக விடை ஏதும் கூறவில்லை என்றாலும்கூட அவள் முகச் சிவப்பின் நாணம் ஒத்துக் கொள்வதைப் பிரதிபலித்தது.

''நீங்கள் எதுவுமே பேசவில்லையே, நளினி!''

''நன்றி சொல்ல வேண்டுமா?'' என்று மெல்லச் சிரித்தாள் அவள்.

''ஏற்றுக் கொண்டால் நன்றி சொல்வார்களா?''

''அப்படியானுல் உங்களுக்கு நன்றி இல்லை!''

''ஆகவே...''

எங்கள் பஸ் அருகே வந்து விட்டது. ஆசையின் பரபரப்பு மறைய பஸ் ஏறினேம்.

அதன்பின் நியாயமான வேகத்தில், நிதானமான புன்னகையில் எங்கள் நட்பு வரம்பு மீருமல் நீடிக்கலாயிற்று. எந்தவிதமான தனிமை மயக்கமோ, தனிமைத் தயக்கமோ எங்களிடையே ஏற்பட்டதில்லை. அதன்பின் அவள் இரக்க மனத்தைச் சுட்டிக்காட்டி நான் புகழ்ந்ததுகூடக் கிடையாது. எனினும் உள்ளங்களைப் புரிந்து கொண்ட கனிவு எங்கள் பார்வையில் கனிந்து கொண்டிருந்தது.

இன்று அம்மா பேச்சைத் தீவிரமாக ஆரம்பித்து விட்டாள். இனியும் தள்ளிப் போடுவதில் அர்த்தமில்லை. நளினியிடம் சொல்லிவிட வேண்டியதுதான். அதைக் கேட்டு அவள் முகம் எப்படி மலரும்? இரண்டாம் முறையாக அவள் வெட்கப் புன்னகையைக் காணப் போகிறேன் நான்!

வழக்கமாக எனக்கு அடுத்த மூன்ருவது ஸ்டாப்பில் பஸ் ஏறிய நளினி, என்னைப் பார்த்துச் சிந்தும் அழகான முறுவலை மனதார ஏற்றேன் நான். என்ன பட்டுப் போன்ற மிருதுவான சுபாவம் அவளுக்கு! எத்தனை மென்மையான அழகு!

பஸ்ஸை விட்டு இறங்கினேம். சுற்றிலும் சுறுசுறுப்பாக உலகம் இயங்கிக் கொண்டிருந்தது. வாகனங்களுக்கு வழிவிட்டுச் சாலையில் எங்களைக் கடத்திக் கொண்டோம். நடைபாதைகளிடையே ஒதுங்கி வரும் கூட்டத்தின் கைவீச்சுக்கு ஒதுங்கினேம். இதோ, இந்தத் தெருவைக் கடந்தால் அலுவலகம் வந்துவிடும்.

''நாம் ஒரு முடிவுக்கு வரவேண்டிய நேரம் வந்துவிட்டது நளினி! எங்கள் வீட்டில் உங்களைப் பற்றிக் கூறிவிட இருக்கிறேன்! உங்களுக்கு அதில் ஆட்சேபனை இல்லையே....?''

அவள் என்னை வியப்போடு பார்த்தாள். ''எனக்கு என்ன ஆட்சேபனை இருக்க முடியும்?'' என்ருள் மிருதுவாக.

''அதற்கு முன்பு நீங்களும் நானும் நம் குடும்பங்கள் குறித்து மனம் திறந்து பேச வேண்டும். என் வீட்டுக்கு உங்களை அழைத்தால், முன்னதாக உங்களிடம் பழகியிருக்கிறேன் என்ற கெட்டபெயர் ஏற்படக்கூடும்.''

''என் வீட்டுக்கு வாருங்கள், பேசலாம்'' என்று அழைத்தாள் அவள்.

''இன்று மாலையே வரலாமா?''

''ஓ! மாலையே வாருங்கள்!''

அன்று மாலை வியர்வைக் கசகசப்போடும், வேலை செய்த களைப்போடும், நளினியின



வாட்டர்ப்ரூஃப் கேப்டன்
ஆடவருக்கு: ரூ.12.95*



எவர்கூல் ஸாண்டல்
ஆடவருக்கு: ரூ.9.25*



மோஹாக்
ஆடவருக்கு: ரூ.9.25*

## மழைக்காலத்தில் உல்லாசமாக
## நடப்பதற்கு நாகரீகமான ஆறு மிதியடிகள்



லேஸின்
ஆடவருக்கு: ரூ.8.50*



ஸ்லிப்-ஆன்
ஆடவருக்கு: ரூ.8.25*



பாலேரீனா
பெண்மணிகளுக்கு:
ரூ.6.25*

*வரிகள் தனி

உங்களுக்கு அருகிலுள்ள கரோனா கடைக்கு விரைந்தோடுங்கள்
வனப்புமிக்க மழைகால வகைகளைப் பார்வையிடுங்கள்

# கரோனா மிதியடிகள்

தாங்கி உழைப்பவை, கிழியாமல் தாக்குப் பிடிப்பவை!

**கரோனா ஸாஹு கோ. லிட்.**
221, தாதாபாய் நௌரோஜி ரோடு, பம்பாய்-1

# ஏஸிஸி அக்கோப்ரூஃப் தண்ணீரை அண்ட விடுவதில்லை

அக்கோப்ரூஃப், சிமெண்ட் மார்ட்டர் அல்லது சிமெண்டை நீர் புகமுடியாத தாகச் செய்யும். ஏஸிஸியின் சிமெண்ட் வாட்டர்ப்ரூஃபிங் அடிட்டிவ் ஆகும். அது உங்கள் கட்டிடத்தைப் பாதுகாத்து நிலவறைகளை வாட்டர்ப்ரூஃப் தன்மையுடையதாகச் செய்கிறது. பின்வருவனபோன்ற நீர்த்தேக்க நிர்மாணங்களில் பயனுள்ளமுறையில் விசேஷமாக உபயோகிக்க உகந்தது **அக்கோப்ரூஃப்**—

- □ நீர்த்தொட்டிகள்
- □ ரிஸர்வாயர்கள்
- □ நீர்க்குழாய்கள்
- □ வடிகால்கள்.

உங்கள் தேவைகளுக்கு அருகாமையிலுள்ள **ஏஸிஸி** ஸ்டாக்கிஸ்ட் அல்லது தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்டை அணுகுங்கள்.

தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்
தபால்பெட்டி 175/1,
மவுண்ட் ரோடு மதராஸ்.

**ஏஸிஸி** தரத்தில் உயர்ந்த தயாரிப்புகளுக்கு நீங்கள் பெறும் உத்தரவாதம்

தி அஸோஸியேடட் சிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட் • தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கோ. ஆஃப் இந்தியா லிமிடெட்.

வீட்டை அடைந்தாலும் ஒரு புதிய முடிவுக்குத் தயாராகிறேம் என்ற உற்சாகம் இருந்தது.

பத்துப் பதினேந்து குடும்பங்கள் ஒன்ருக இருந்த ஒரு சிறு வீடு. அதில் ஒரு சிறிய அறைக்கு அழைத்துச் செல்லப்பட்டேன். கூடு மானவரை சுத்தமாகவே இருந்தது. அறை நடுவே ஓர் அழுக்கடைந்த படுதா. அதனுள்ளிருந்து ஏதோ ஒரு மெல்லிய முனகல் ஒலி கேட்டது.

''உட்காருங்கள்!'' என்று என்னை உபசரித்துவிட்டு உள்ளே போனுள் நளினி; அதாவது சாக்குப் படுதாவினுள் !

''நளினி ! வந்துட்டயாம்மா ! நீ எச்சுட்டுப் போன கஞ்சியைப் பூனை கொட்டிட்டது. மத்தியானம் ஒன்றும் சாப்பிடலே. கஞ்சி போட்டுத் தாம்மா... பசி தாங்கலே...''

''ஆரம்பிச்சுட்டியாம்மா, உன் புலம்பலே? அடுத்த அறையில் 'விருந்தாளி' வந்திருக்கிறர். கூச்சல் போடாதே. கொஞ்சம் பொறுத்துக் கொண்டிரு. அவருக்குக் காப்பி போட்டுத் தந்ததும்தான் உனக்குக் கஞ்சி..!''

நான் திடுக்கிட்டேன். ஒரு தீனமான குரலுக்குத் தீவிரமான கடுமையோடு பதில் அளிப்பது நளினியா? கடுகு சிறுத்திருப்பது போல் அந்த உள்ளடங்கிய குரலில்தான் எத்தனை காரம் ! அதுவும் பெற்ற தாயாரிடமா? மத்தியானம் சாப்பிடவில்லை என்று கூறியும் அவள் இரக்கப்படவில்லையே ?

'' எனக்கும் கொஞ்சம் காப்பியாவது தந்துடு முன்னலே....'' என்றது தீனக் குரல்.

''ஆமாம், ரொம்ப அவசரமாக உனக்குத் தான் காப்பி போடறேன். தினம் தினம் தான் என் உயிரை எடுக்கறையே, சித்தப் பேசாம இரேன்..... வந்த மனுஷர் போகட்டும்.''

கண்ணுடி சிதறியடிக்கும் ஒளியாக அந்த இல்லம் நளினியின் உண்மை மனத்தை வெளிச்சம் போட்டுக் காட்டியது. துயரத் துடிப்போடு விடை காண முயன்ற என் மனம் தன் அதிர்ச்சியை விழுங்க முயன்றது.

முகம் கழுவிப் புதிதாக முகப் பூச்சிட்டுக் கொண்டு உடை மாற்றிய கோலத்தோடு காப்பியை என் எதிரே வைத்தாள் நளினி. வீட்டில் ஓர் உடை, அலுவலகத்தில் ஓர் உடை என்பதுபோல் மனத்தையும் வைத்திருக்கிருளோ?

''உன்னை யாருக்கு உடம்பு சரியில்லே ? அம்மாவா ?''

''அவளுக்கு என்ன வேலே? ஒரே தொணதொணப்பு !''

''வேறு யார் கூட இருக்கிருர்கள்?''

''தம்பி ஒருத்தன். காலில் ஊனம்.''

''எப்படி ஏற்பட்டது ?''

''ஆங்! பெரிய வால்!. சும்மா இருந்தாத் தானே ? கோலி விளையாடற போது கார் வர்றதுகூடத் தெரியாது. அடிபட்டது. அலட்சியம் தந்த தண்டனை.''

எத்தனை குரூர வார்த்தைகளைக் கொட்டுகிருள் !

''இப்பவும்கூடப் பொறுக்கிப் பசங்களோடு கோலிதான் விளையாடிக்கிட்டிருப்பான்......

# ஜனதிபதியின் பஸ் பயணம்



இன்றைய ஸ்விட்ஜர்லாந்தின் ஜனதிபதி, தம் அலுவலகத்துக்கு பஸ்ஸில்தான் தினமும் போகிறர்!

ஜனதிபதி வோ, தம் கார்களில் எதையும் உபயோகிப்பதில்லை. தம் மாளிகை எதிரே வந்து நிற்கும் பஸ்ஸில் மக்களோடு மக்களாக பஸ்ஸில் ஏறி, எவ்வித விசேஷ மரியாதையையும் ஏற்க மறுத்துப் பயணம் செய்கிறர்.

ஜனதிபதியாக இருந்து கொண்டு பஸ் பயணம் செய்பவர் உலகிலேயே இவர் ஒருவர்தான்!

ஆதாரம்: வீக் என்ட்
நகவல்: ஏ. சுவாமிநாதன்

சம்பாதித்துப் போட நான் இருக்கிறேனே !'' பெருமூச்செறிந்தாள் அவள்.

''இந்த இரண்டு பேரும் உங்களைத்தானே நம்பியிருக்கிருர்கள் ?''

''இல்லே...இல்லே! நம் கல்யாணமாகி விட்டால் இவர்களை விட்டு விடுவேன். அம்மா தானுக எழுந்து விடுவாள். பணம் கொஞ்சம் தந்து விட்டால் போதும்!''

சற்று நேரம் மௌனம் நிலவியது.

''புறப்படட்டுமா நளினி !''

''எப்போது ஒரு முடிவுக்கு வரப் போகிறீர்கள்? இந்த நரகத்திலிருந்து எப்போது எனக்கு விடுதலை ?''

''அதைத் தீர்மானிக்கலாம், நளினி!''

தொய்ந்த நடையுடன் புறப்பட்டேன் நான். மனம் கருண்டு கொண்டது. ''நீ தப்பித்தாயே, அது போதாதா?'' என்று உள்ளே ஒரு குரல் என் ஏமாற்றக் கேவலை ஒற்றி எடுத்தது.

இப்படியும் ஒருத்தியா ?

பிரிட்டிஷ் பெண்களுக்கு, வீட்டிலிருக்கும் போது ஒரு முகம், வெளியில் புறப்படும் போது ஒரு முகம் என்று ஒரு சீனத் தத்துவ ஞானி கூறியுள்ளாராமே ! அது எல்லாப் பெண்களுக்குமே பொருந்துமோ ?

இறந்தவர்கள் குடும்பத்துக்கு உதவவும், ஜவான்கள் பாதுகாப்பு நிதிக்குத் தன் அணிமணிகளைத் தரவும் முன்வரும் ஓர் இரக்க சுபாவமுள்ள பெண் என்று கருதினேனே ? சொந்த வாழ்வில் துன்பம் ஏற்றுப் பொறுக்கும் பொறுமையற்றவள் அவள்! தூர நின்று உதவ முன் வருவாள். வகை செய்வாள். தனக்கே ஏற்பட்டதைச் சுமையாக எண்ணி வெறுப்பாள், வெடு வெடுப்பாள். விட்டு விலகி ஓடிவிடத் தயங்கமாட்டாள். அவளை என் கற்பனையில் எவ்வளவு உயர்த்தி வைத்திருந்தேன் !

நான் அவளிடம் அன்பு பூண்டேன். உண்மைதான்! அது ஒருவிதத்தில் சுயநலத்தோடு கூடியதுதான். எனக்கும், என் குடும்பத்துக்கும் அவள் இரக்க மனம் உதவியாக இருக்கும் என்று அவளைத் தேர்ந்தெடுத்

## ஈர மிதியடி !



ஜெர்மனியில் கோழிப் பண்ணைகளுக்கு எதிரில் ஓர் ஈரக் கசிவான மிதியடியை வைத்திருக்கிறார்கள். அதை மிதித்துக் கொண்டுதான் உள்ளே செல்ல வேண்டுமாம். ஏனெனில் அம் மிதியடிகளில், தொற்று நோய்த் தடுப்பு மருந்து தடவப்பட்டிருக்கும். கோழிகளுக்கு எந்த நோயும் வராமல் இருப்பதற்காகத்தான் இந்த ஏற்பாடு !

ஜெர்மனியைப் பற்றிய ஒரு புத்தகத்திலிருந்து தகவல் - சூரி

---

தேன். அந்த ஆசையை அவள் நெஞ்சில் வளர்த்த குற்றம் என்னுடையதுதான். ஒரு வேளை என் குடும்பத்தைப் பற்றி முன்பே கூறியிருந்தால் அவளே என்னை மறுத்திருக்கக் கூடும்! அது இப்போதுதான் உறைத்தது!

என்றாலும் என் மீது குற்றம் உண்டு என்று அவளை ஏற்றுக்கொண்டுவிட முடியுமா? வெறும் உல்லாசங்களையும், சுகபோகங்களையும் மட்டும் நம்பி ஒருத்தி என் வாழ்வின் துணையாக வர நினைத்தால் அந்தத் தோல்வி அவளை மட்டும் பாதிக்காது. என்னையும் பாதிக்கும் ! அவளது சேவையை, பணி புரியும் ஆற்றலை, இரக்கம் காட்டும் அன்பை, அதனையொட்டி அவளோடு கலந்து வாழும் இனிமையை நான் எதிர்பார்த்தேன். இரட்டை முகங்கள் உள்ள ஒரு பெண்ணை அல்ல !

இந்த நளினி என் வீட்டுக்கு வந்தால் சிரிப்பால் துயர் மறப்பாள், இரக்கத்தால் தொண்டு புரிவாள். அன்புள்ளத்தால் கருணையின் கைகளாக இருப்பாள் என்று கனவு கண்டேனே.... எத்தனை முட்டாள்தனம்!

வீட்டினுள் வரும் போது என்னை இருமல் வரவேற்றது. அம்மா புண்ணியம் செய்தவள் தான்! இல்லையானால் நான் நளினியை மணந்திருப்பேனே! இப்போது என் மனம் அவளுக்கு நிரந்தரமாக மூடிக் கொண்டு விட்டது.

நான் வேறொரு பெண்ணை மணக்க நிர்ப்பந்திக்கப்படுகிறேன் என்று கூறிய போது நளினி அதை நம்ப மறுப்பது போல் தலையசைத்தாள்.

'' அன்று நான் வைத்த காப்பியைச் சாப்பிடாமலேயே எழுந்து வந்துவிட்டீர்கள்! அப்போதே உங்கள் மனமாற்றத்தைப் புரிந்து கொண்டு விட்டேன்.''

''மன்னித்துவிடு, நளினி!''

அவள் கண்களில் எத்தனை முயன்றும் கசிவு கண்டது. ''நான் உங்களை நோவப் போவதில்லை தாமு ! ஆனால் இதில் எனக்கு வருத்தம்தான். எப்படியோ உங்கள் மனத்திலிருந்து தள்ளப்பட்டு விட்டேன் என்பது புரிகிறது. அதற்குரிய காரணம்...? அந்தக் காரணத்தை மட்டும் சொல்லவில்லை என்றால் நீங்கள் குற்றவாளியாகிறீர்கள் .''

நான் பிரமிப்போடு அவள் முகம் பார்த்தேன். பின் மெதுவான குரலில் கூறினேன். ''உங்களுக்கு நான் நன்மைதான் செய்திருக்கிறேன் நளினி. ஏனென்றால் என் வீட்டில் என் அப்பா வாத நோய் வந்து ஊட்டும் குழந்தையாகப் படுத்திருக்கிறார். மருமகள் வந்து சிசுருஷை செய்தால்தான் சௌகரியப்படும் என்பதற்காகவே காத்திருக்கும் பலவீனமிக்க என் தாயார். அரைப் பைத்தியமாக இருப்பது போதாதென்று ஊமையாகவும் உள்ளாள் என் தங்கை.... இந்தச் சூழலில் உன்னால் ஒன்றிக் கலந்து சுகமாக வாழ்வதென்பது முடியாது என்று....''

''நீங்கள் இத்தனை நாட்களாக ஏன் பழக வேண்டும்?'' ஆணித்தரமாக வந்தது கேள்வி.

''ஏனென்றால் நீ இரக்கமுடையவள் என்று நினைத்தேன். மற்றவர்கள் வாழ்வுக்கு, பாதுகாப்புக்குப் பணம் சேர்ப்பதுமாக இருந்த உன்னைப் பார்த்ததும், தியாக மனம் படைத்த நீ என் வாழ்வில் ஒன்ற முடியும் என்று தவறாக நினைத்து விட்டேன். அன்று உன் வீட்டில் நடந்ததைக் கவனித்த பின்... உன் தாயார் கஞ்சி கேட்க, முக்கிய விருந்தினரைக் கவனித்து விட்டுத்தான் தருவேன் என்று இரக்கமின்றிக் கூறினாய். ஊனமான தம்பியை விட்டுவிட்டு வந்துவிடுவேன் என்றாய். அங்கே தோன்றாத — பாசம் மிக்கவர்களிடமே தோன்றாத இரக்கம்தானா பிறரிடம் ஏற்பட்டுவிட முடியும்?''

''ஓ! மூன்று பேருக்கு முழுச் சேவை செய்வதென்பது என்னால் முடியாதுதான் தாமு! தேங்க் காட் ! இப்போது நான்தான் உங்களுக்கு நன்றி கூற வேண்டும்!'' அவள் துயரம் போய் விட்டது. கூண்டுக்குள் அடைபட இருந்தோமே என்ற தப்பித்த உணர்வும் ஏற்பட்டிருக்கலாம் !

கட்டுப்பெட்டியானாலும் ஒரே முகத்தைக் கொண்ட சகுந்தலா எங்கள் வீட்டுக்கு விளக்கேற்ற வந்து விட்டாள். அகந்தையற்ற அவள் தொண்டு எங்களுக்கெல்லாம் இனித்தது. கல்விக்கு அகந்தை உண்டுதான் என்றும் நம்ப வைத்தது.

நளினி 'கொடி தின' வசூலில் சுறுசுறுப்பாக இருந்தாள். குரலில் கலகலப்பு. கைகளிலும் கலகலப்பு. அவள் சேர்க்கும் பணம் ஒரு நல்ல காரியத்துக்குப் பயனாகிறது. இந்த உயர்ந்த தொண்டுக்கு உதவும் அவள் இன்னொரு முகம்.

அது எப்படி இருந்தால் என்ன? நளினியின் இரட்டை முகங்களில் இந்த முகம் எவ்வளவு அழகானது !

''மிஸ்டர் தாமு! கொடி தினத்துக்கு...!''

நான் ஒரு ரூபாயைத் தருகிறேன்.

''ரொம்ப நன்றி !'' என்று என்னவோ போல் கூறுகிறாள் அவள். கொஞ்சநாள் முந்தி இதற்காகத்தானே என் மீது அன்பு கொண்டிருந்தாய் என்ற குறும்புபோல், இல்லை ஏளனமாக... இல்லை அகந்தையாக...

கல்விக்கு அகந்தை உண்டு என்று நிரூபணமாவது போல் உணர்கிறேன்.

ஓ ! இப்போதெல்லாம் நளினியைப் போன்ற பெண்களுக்குப் பொறுப்பற்ற பொதுத் தொண்டு இனிக்கிறது! பொறுப்பு வாய்ந்த குடும்பத் தொண்டு கசக்கத்தான் செய்கிறது !

ஐந்தே

காசு

போதும்

உங்கள்

குடும்பம்

பெருகாமல்

தடுக்க!




# நிரோத்

உபயோகியுங்கள்



உயர்தர ரப்பரிலான கருத்தடைச் சாதனம்

**குடும்பக் கட்டுப்பாட்டிற்கு**

15 காசுக்கு 3

அரசாங்க ஆதரவிலும் குறைந்த விலை

<u>வேண்டுமென்றபோது மட்டுமே பேறு...</u>

வேண்டுமென்றபோது மட்டுமே இன்று மக்கட்பேற்றை ஏற்படுத்திக் கொள்ளலாம். இதற்கு நிரோத் உதவும்.

<u>தாய் சேய் இருவரின் தேகநலம்...</u>

குழந்தைகள் சரியான வளர்ச்சி பெற, முதல் மூன்று நான்கு வருடங்கள் அவர்களுக்கு விசேஷமான பராமரிப்பு தேவை என்று வைத்தியர்கள் கூறுகின்றனர். பேற்றில் இழந்த தேக வலுவை மீண்டும் பெற தாய்க்கும் சிறிது காலம் பிடிக்கும். நிரோத் உபயோகிப்பதனால், அடுத்த பேற்றைச்

சுலபமாகத் தள்ளிப் போடலாம்.

நிரோத் (காண்டோம்) உயர்தர ரப்பரிலான கருத்தடைச் சாதனம் ஆண்களுக்கானது. எளிமையான, தீமையற்ற நிரோத் உலகமெங்கும் உபயோகிக்கப்படுகிறது. இதை உபயோகிப்போரின் தேகநலம் பாதிக்கப்படுவதில்லை. நிரோத் எங்கும் கிடைக்கும்

---

நிரோத், வீட்டுச் சாமான்கள் விற்கும் கடை, மருந்துக் கடை, வெற்றிலைப் பாக்குக் கடை ஆகியவற்றில் கிடைக்கும்.

70/67




பெட்டிக்குள் உள்ள கடிதம் ரூபாய் 15/- பரிசு பெறுகிறது.

இரண்டு வருஷங்களாகவே சமையலுக்கு வீக்கோ கரி உபயோகப்படுத்தி வருகிறேன். இரண்டு வருஷங்களுக்கு முன்பு நாற்பது கிலோ கொண்ட மூட்டை ஒன்று ஒன்பது ரூபாய்தான். 'வீக்கோ கரி உபயோகப்படுத்துங்கள்' என்று சர்க்காரே பல பத்திரிகைகளிலும் விளம்பரம் செய்தார்கள். அதன்பின் மூட்டை ஒன்று பதினொரு ரூபாயாக உயர்ந்தது. இப்பொழுது ஒரு மாதமாக வீக்கோ முன்போல் தாராளமாய்த் தட்டுப்பாடின்றி வருவது இல்லை. அதனால் ஒரு மூட்டை பதினைந்து ரூபாயாக இருக்கிறது. 'வேண்டுமானால் எடுத்துக் கொள்ளுங்கள்' என்கிறார் கடைக்காரர். மத்தியதரக் குடும்பப் பெண்களுக்கு இப்படி இரு மடங்கு விலைவாசி ஏறுவது எவ்வளவு சமாளிக்க முடியாமல் இருக்கும் என்பதைச் சர்க்கார் உணர வேண்டும். வீக்கோவின் தற்போதுள்ள உண்மையான விலை என்ன என்பதைச் சர்க்கார் விளம்பரமூலமாகவேனும் தெரிவித்தால், என் போன்ற குடும்பப் பெண்களுக்கு மிக உதவியாக இருக்கும். மேலும் இப்படிக் கொள்ளை லாபம் அடிக்கும் ஏஜண்டுகளுக்கு லைசென்ஸ் ரத்து செய்ய வேண்டும்.

திருப்பூர் — 1
22—6—70 கே. சகவரி நடேசன்

சமீபத்தில் கோவை ஜில்லா விவசாயிகள் ஒரே மாதிரி மின்சாரக் கட்டணம் வேண்டும் என்று கோரிக்கை விடுத்தனர். கோரிக்கையில் உள்ள நியாயத்தையும் வலிமையையும் தீர்க்கதரிசனத்துடன் உணர்ந்து அதை அரசு முதலிலேயே கௌரவமாக ஏற்றிருக்க வேண்டும். ஜில்லா விவசாயிகள் சங்க ஆதரவில் ஹர்த்தால் நடந்தது. போலீஸ் தடியடிப் பிரயோகம் செய்தது; கண்ணீர்ப் புகைப் பிரயோகம் செய்தது. இவ்வளவு வன்முறைகள் நடந்த பிறகு கோரிக்கையை அரசு ஏற்றது. இதே போல் வன்முறையில் இறங்கி ஹர்த்தால் செய்தால்தான் கோரிக்கை ஏற்கப்படும் என்று மக்கள் எண்ணும்படி ஆகிவிட்டது. இந்த எண்ணம் வளர அரசு இடம் தரலாமா?

அருப்புக்கோட்டை
20—6—70 எம். ரவீந்திரன்

மேற்கு வங்கத்தின் இன்றைய நிலையைத் தீர்க்கமாக ஆராயும் பொழுது, கம்யூனிஸ்டு கட்சியின் சித்தாந்தங்களைச் செயலாக்கி வரும் நக்ஸல்பாரிக் கூட்டத்தினரின் ஆதிக்கம் இங்கு நன்கு வேரூன்றி விட்டது என்பது தெளிவாகிறது.

அண்ணல் காந்தியடிகளின் சிலைகளையும், படங்களையும் உடைப்பது, கண்காட்சி சாலைகளில் காந்தியின் கொள்கைகள் அடங்கிய நூல்களை எரிப்பது, நிலச்சுவான்தார்களைக் குத்திக் கொல்வது, நிலப் பத்திரங்களை அழிப்பது, அறுவடைக்கு உள்ள பயிரை நாசம் செய்வது, மருத்துவ விடுதிகளைத் தாக்குவது, கல்லூரித் தேர்வு நடக்கும் இடங்களில் வெடிகுண்டுகளை விட்டெறிவது, மிரட்டல் கடிதங்கள் — இவை யெல்லாம் இங்குள்ளோருக்கு அன்றாடம் நிகழும் சாதாரண நிகழ்ச்சிகளாகவே தோன்றுகின்றன.

அண்மையில் நடந்த நக்ஸல்பாரிகளின் மனிதாபிமானமற்ற செயல்களால் இரண்டு இளம் சப்-இன்ஸ்பெக்டர்களும், ஒரு கான்ஸ்டபிளும் இரங்கத்தக்க முறையில் உயிரிழந்த செய்தி பெரும் வேதனையைத் தருவதோடு மக்களிடையே பீதியையும் ஏற்படுத்தியுள்ளது. நடுப் பகலில் நடக்கும் இந்த ஈவிரக்கமற்ற செயல்களின் பொழுது பொதுமக்கள் உயிருக்கு அஞ்சி வெறும் பார்வையாளராக இருக்கவே நேர்கிறது.

இங்கு நிலவி வரும் கொந்தளிப்பான நிலைமையைக் கண்டும் காணாததுபோல் இருக்கும் மத்திய அரசு, மன்னர்களுக்கு வழங்கி வரும் மானியத் தொகையை நிறுத்துவது குறித்தும், கம்போடியப் பிரச்னையைப் பற்றியும் விவாதங்களில் ஈடுபடுவது ஆத்திரத்தையே ஊட்டுகிறது.

பார்லிமெண்டில் 'நக்ஸல்பாரிப் பிரச்னை' எழும்போதெல்லாம் உள்துறை அமைச்சர் ''தீவிரமாக ஆராயப்பட வேண்டிய விஷயம் அது'' என்றே ஆறு மாதங்களாகக் கூறி வருகிறார். ஆட்சி பீடம் ஆட்டம் காணுமோ என்ற அச்சத்தில்தான் அவர் உறுதியான நடவடிக்கைகளை உடனடியாக மேற்கொள்ளத் தயங்குகிறார் என்பது தெளிவான விஷயம். புற்றீசல் போலப் பெருகி வரும் 'நக்சல்' கூட்டத்தினரின் மிருகத்தனமான செயல்களுக்கு முற்றுப்புள்ளி வைக்காமல் பதவியை உடும்புப் பிடியாகப் பற்றிக் கொள்வதிலேயே கவனம் செலுத்தும் ஆளுனரின் போக்கைப் பார்த்தால் வங்கத்தில் ஜனநாயகம் முழுமையாகத் தன் பொருளை இழந்துவிடும் என்றே எண்ணத் தோன்றுகிறது. இந்த நிலையின் நீடிப்பு, இந்திய எல்லைக்குள் ஒரு சீனா உருவாகும் நாள் வெகு தொலைவில் இல்லை என்பதைத்தானே உறுதிப்படுத்துகிறது?

க. மணி
கல்கத்தா — 26, 19—6—70

**Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31**

**Managing Editor: T. Sadasivam**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

அடேயப்பா, வளர்ச்சியின் உச்சநிலை!
இப்படியொரு மகத்தான மாறுதலை
விளைவிக்கமுடியுமா ஒரு டானிக்?



## ஆம், வளர்ச்சிக்கான பசியை உங்கள் குழந்தைக்கு வளமுடன் வழங்குவது இன்க்ரிமின்*

இன்கரிமின் டானிக் பிரத்தியேகமாகப் பசியைத் தூண்டி, வயிறார உண்ணும் மிகுதியான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றி, வாட்டசாட்டமாக வலுவோங்கச் செய்கிறது. சாப்பி-டும் புரத சத்து அனைத்தையும் நன்கு பயன்படுத்திக்கொள்ள உதவுகிறது இன்க்ரிமின். நம் உணவில் இல்லாத ஒரு முக்கிய அமினோ அமிலம் செறிந்துள்ள டானிக். வளரும் வயதினிலே (4 வாரம் முதல் 14 வயது வரை) அன்றாடம் கொடுங்கள் ! செர்ரிப் பழச் சுவை ததும்பும் இன்க்ரிமின். மறவாதீர்கள் !

**இதுவே கண்கண்ட வளர்ச்சிப் பருவம், இன்க்ரிமின்* பருவம்**

◀ பெரிய குழந்தைகளுக்கு (இரும்புச் சத்து அடங்கிய) இன்க்ரிமின் ஸிரப்

இளங் குழந்தைகளுக்கு இன்க்ரிமின் டிராப்ஸ் ▼









Lederle

எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கின்றன. உலகெங்கும் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒரு பெயராகிய லெடர்லி தயாரிப்பது இன்க்ரிமின்.
லெடர்லி டிவிஷன், ஸயானமிட் இந்தியா லிமிடெட், பி.ஓ. பாக்ஸ் 6577, பம்பாய்-18.

*அமெரிக்கன் ஸயானமிட் கம்பெனியின் ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க்.

லின்டாஸ்-INC-3-140TM